

வித்துவான்
**க. கதிரேசன்** எம்.ஏ.பி.எட்.

இந்நூலின் உரையாசிரியர் வித்துவான் க.கதிரேசன் எம்.ஏ.பி.எட்., திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரியில் (1955-59) பயின்றவர். 1958ல் சென்னை மாணவர் மன்றம், காரைக்குடி திருக்குறள் கழகம் நடத்திய மாநில, கல்லூரிக் கவிதைப் போட்டிகளில் முறையே 4ஆம், 3ஆம் பரிசு பெற்றவர். 1959-1994 வரை குன்றக்குடி ஆதீனத்துக் குன்றக்குடி த.க.கு மே.பள்ளியில் தமிழாசிரியர் பணி, 1994-2000 வரை பிள்ளையார்பட்டி வேதசிவாகம பாடசாலையில் சாத்திரம், திருக்குறள், திருமுறையாசிரியர்.

27.03.1994 ல் "குன்றக்குடி ஆதீனப் புலவர்" ஆக்குதல், 02.10.2006 ல "சைவத் தமிழ்மணி விருது" 16.08.2009 ல் "சித்தாந்தச் செல்வர்" 03.06.2012 ல் "தமிழாகரர்" 28.07.2013 ல் "சைவத் தமிழறிஞர்" விருது பெறுதல்.

வெளியிட்ட நூல்கள் - உரை நூல்கள்: ஸ்ரீ தெய்வசிகாமணி தேசிகர் நான்மணிமாலை, இவர் மீதிலான சிற்குருமாலை; அருள்தரு வீரமாகாளி அம்மன் பாமாலை, அருள்தரு சண்முகநாதப் பெருமான் பாராயணப் பாமாலை, அருள்தரு தோகையடி விநாயகர் துதிக்கை மாலை, சிங்கைச் சிலேடை வெண்பா, போற்றி மடக்குப் பதிகம், பாம்பன் சுவாமிகளின் குன்றக்குடிப் பதிகம், பூவாளூர்த் தலப்புராணம்,பூவாளூர் சி. தியாகராச செட்டியாரின் தி.மீசு. பி. அந்தாதி, திருவாரூர்பாதி திருவொற்றியூர்பாதி வெண்பா மாலை திருச்சிற்றம்பல வெண்பா அந்தாதி, திருவாரூர் மருந்து வெண்பா மாலை. தொகுப்பு: விநாயகர், முருகன், அம்மை,அப்பன் மீது அருளாளர் வாக்கால் 1008 போற்றி, திருக்கோயில் வழிபாடு. கவிதை: அருள்தரு கற்பக விநாயகர் பதிகம், அருள்தரு சண்முகநாதப்பெருமான் மாத,வாரப் பதிகங்கள், அருள்தரு குங்கும சுந்தரி அம்மை பதிகம், அருள்தரு வீரமாகாளி அம்மை பதிகம், கல்லூரிப் பாடநூலாகவும், எம்.ஃபில் ஆய்வேடாகவும் அமைந்த "நெஞ்சுவிடுதூது". நினைவு மலர்கள்: தோகூர்ப் பண்ணை மு. சுப்பிரமணியன் செட்டியார், இளக்காரியக்காரர் அ.ந. சம்பந்தஞ் செட்டியார் மீதில். கட்டுரைகள்: அருள்நெறித்தந்தை குன்றக்குடி அடிகளார் அவர்களின் வரலாறு கூறும் "காலமாய் நிற்கும் காட்சி" இதழ்களில் கருத்தரங்கங்களில் இடம் பெற்ற கட்டுரைகள்.

தொடர் கட்டுரைகள்:

ஸ்ரீ குமரகுருபரர் அடிச்சுவட்டில் தன் முன்னேற்றக் கருத்துகள், ஸ்ரீ குமரகுருபரர் அருந்தமிழில் சைவ சித்தாந்தம்.

**கேட்டல், படித்தல், எழுதுதல் மட்டுமே பணி.**

சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி ✆ : 04577 264166

திருத்தவத்துறை - இலால்குடி

# அருள்தரு பெருந்திருப்பிராட்டி அந்தாதி



ஆசிரியர் : அருட்கவி அழகர்சாமி பிள்ளை
விளக்கவுரை : குன்றக்குடி ஆதீனப்புலவர் க. கதிரேசன்

திருத்தவத்துறை - (இலால்குடி)

# அருள்தரு பெருந்திருப்பிராட்டி அந்தாதி

ஆசிரியர் :

கலைப்பெரும்புலவர்.சோதிடர்.அருட்கவி

**ந. அழகர்சாமி பிள்ளை**

திருத்தவத்துறை - 621 601

நூல் வெளியீட்டு நாள் :

**அருள்தரு பெருந்திருப்பிராட்டி திருமுன்**

**01.08.2014**

அச்சுப்பணி ஏற்றுப் போற்றுதல் :

திருமிகு. **நா. சம்பந்தமூர்த்தி செட்டியார்** அவர்கள்

திருமிகு. **சொ. இராசமாணிக்கம் செட்டியார்** பி.காம்., அவர்கள்

திருமதி. **மரகதம் இராசமாணிக்கம்** எம்.ஏ., அவர்கள்

சின்னசெட்டித் தெரு

திருத்தவத்துறை - இலால்குடி 621 601

செல் : 919500054136

விளக்கவுரை :

குன்றக்குடி ஆதீனப்புலவர். தமிழாகரர்

சைவத்தமிழ்மணி. சைவத்தமிழறிஞர். சித்தாந்தச்செல்வர்

வித்துவான். **க. கதிரேசன்** எம்.ஏ.,பி.எட்.,

பூவாளூர் - 621 712

செல் : 09865193754

## உள்ளுறை

# தோரணவாயில்

திருஞானசம்பந்தர் வழிபட்டு மகிழ்ந்ததும், திருநாவுக்கரசர் 'பண்டெழுவர் தவத்துறை' என்று தமது அடைவுத் திருத்தாண்டகத்தில் (பா.1) குறிப்பிட்டுப் போற்றியுள்ளதும், அத்திரி முதலிய முனிவர் எழுவர் வழிபட்டுப் பேறுகள் பற்பல பெற்றதும், திருமகள், கண்ணபிரான், வயிரவி, குபேரன் ஆகியோர்க்கு வரம் பல அருளியதும், மழவமன்னனது வெண்குட்டம் தீர்த்ததுடன் வரங்கள் தந்ததும், மகாவித்துவான் தி.மீ.சு. பிள்ளை அவர்களால் பிள்ளைத்தமிழ் பாடப்பெற்ற சிறப்பும், அருட்கவி, வரகவி என்று போற்றப் பெற்ற ந. அழகர்சாமி பிள்ளையவர்களால் அந்தாதி பாடப்பெற்ற சிறப்பும், மும்மூர்த்திகளுள் ஒருவரான தியாகையர் அவர்களால் பஞ்சரத்ன கீர்த்தனை பெற்ற சிறப்பும் முதலிய பல்வேறு சிறப்புகளுடன் விளங்குவது இன்று திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் திருத்தவத்துறை என்கிற இலால்குடியில் உள்ள அருள்கொழிக்கும் அருள்தரு.பெருந்திருப்பிராட்டி உடனாய அருள்தரு 'அழைத்து வாழ்வித்த பெருமான், 'எழுமுனிவர்க்கு இறை' (சப்தரிஷீஸ்வரர்) என்று போற்றப்பெறும் பெருமான் எழுந்தருளியுள்ள திருக்கோயிலாகும்.

முழு ஞானப் பெருக்காக இங்கு எழுந்தருளித் தண்ணருள் வழங்குபவர் அன்னை அருள்தரு பெருந்திருப்பிராட்டி. இவரது குறைவிலா நிறையருள் பெற்றவர் ந. அழகர்சாமி பிள்ளை. அருட்கவி, வரகவி, கலைப்பெரும்புலவர் என்று போற்றப்பெற்ற சோதிடர் இவர். வணிகராகிய இவர், இவ்வம்மையின் திருக்கடைக்கண் கொழித்த கருணைப் பெரு வெள்ளத்தில் திளைத்தவராதலின் தொடக்கப் பள்ளிப்படிப்புக்கூட முடிக்காத இவர், நம் மெய்கண்ட சாத்திரக் கருத்துக்களுடன் அருளாளர்கள் தத்தம் நூல்களில் கூறியுள்ள செய்திகளையும் ஓதாதுணர்ந்து தமது 'அருள்தரு பெருந்திருப்பிராட்டி அந்தாதியில்' நூலெங்கும் மணக்கச் செய்துள்ளார்.

இந்நூலின் முதற்பதிப்பு 06.09.1968இல் (கீல ஆவணி 22 வெள்ளி) அந்நாளைய திருத்தவத்துறைத் தமிழ் இலக்கியமன்றச் செயலாளர் திருமிகு. மு. சின்னச்சாமி அவர்களாலும்; இரண்டாம் பதிப்பு வெளியீட்டாளர் வெளியீடு முதலிய எவ்வகைக் குறிப்பும் இன்றியும் வந்துள்ளன. இதன் மூன்றாம் பதிப்பு, இளமையில் திருத்தவத்துறையில் வாழ்ந்தவரும், இன்று இலண்டன் மாநகரில் உள்ளவருமான திருமிகு. ச. வேதநாராயணன் அவர்களால் 'பண்டெழுவர்



தவத்துறை' என்ற தலைப்பிலான நூல் வடிவில் இத்திருத்தலத்துக்குரிய தலபுராணம், பிள்ளைத்தமிழ், அந்தாதி, கல்வெட்டாய்வு முதலிய பலவற்றுடன் வெளிவந்து மணக்கிறது. இவையனைத்தும் சந்திபிரிக்காத மூலபாட வழிப்பட்டன.

இன்று அருள்தரு பெருந்திருப்பிராட்டியின் மீதிலான இந்த அந்தாதி - (அருட்கவி, கலைப்பெரும்புலவர் ந. அழகர்சாமி அவர்கள் இயற்றியது) எழுத்துப்பிழை களைந்து இன்றைய நிலைமைக்கு ஏற்பச் சந்தி பிரித்து, குறிப்புரை, பொழிப்புரை, மேற்கோள் மற்றும் இன்றியமையா இலக்கணக்குறிப்பு ஆகியவற்றுடன் வெளிவருகின்றது.

இதன் முன்னைப் பதிப்புகளை உதவிய, இலால்குடி பெரிய செட்டித்தெரு இராசாசெட்டியார் மகன் திருமிகு. கந்தசாமி அவர்கள், இத்திருக்கோயில் உள்துறை மணியம் திருமிகு. கருணாநிதி அவர்கள் உள்ளூர்த் தமிழ்ச் சங்கச் செயலாளர் திருமிகு. கவிஞர். புவியரசு அவர்கள் ஆகியவர்கட்கு என் நன்றியும் வணக்கமும் உரியன.

தமது இடையறாத் தொடர் பணிச்சுமைகட்கிடையே அருள்கனிந்த திருவுள்ளத்துடன் நேரம் ஒதுக்கி என்பிற நூல்களுக்கு வழங்கியுள்ளது போலவே இந்நூலுக்கும் வாழ்த்துரை வழங்கிச் சிறப்பித்துள்ள வணக்கத்திற்கும் போற்றுதலுக்கும் வழிபாட்டிற்கும் உரிய திருக்கயிலாய பரம்பரை குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனம் 46வது குருமகாசந்நிதானம் முனைவர். **திருப்பெருந்திரு தெய்வசிகாமணி பொன்னம்பல தேசிக** பரமாசாரிய **சுவாமிகள்** அவர்களின் பொன்னார் திருவடிகட்கு என் மனம் மொழி மெய்யால் ஆன பணிவன்பு கலந்த வணக்கங்களைச் செலுத்திமகிழ்கிறேன்.

தமது பணி நெருக்கடிகட்கிடையே இந்நூலுக்கு ஆசியுரை வழங்கிச் சிறப்பித்துள்ள, தருமை ஆதீனத்துக்குச் சொந்தமான திருவையாறு அருள்தரு ஐயாறப்பர் திருக்கோயில், திருச்சிராப்பள்ளி மௌன மடம் ஆகியவற்றின் கட்டளைத் தம்பிரான் சுவாமிகள் ஆகிய வணக்கத்திற்கும் போற்றுதலுக்கும் வழிபாட்டிற்கும் உரிய முனைவர்.**ஸ்ரீமத் மௌனகுமாரசாமித் தம்பிரான் சுவாமிகள்** அவர்களின் பொன்னார் திருவடிகட்கு என் மனம் மொழி மெய்யாலான பணிவன்புகலந்த வணக்கங்களைச் செலுத்தி மகிழ்கிறேன்.

என் இனிய நண்பர், தமிழாகரர், சித்தாந்தச் செம்மணி, திருச்சிராப்பள்ளி செட்டிநாடு கலை அறிவியல் கல்லூரி முன்னாள் முதல்வர் திருமிகு முனைவர். பழ. முத்தப்பனார் அவர்கள் தமது எழுத்துப்பணி, தொடர்

சொற்பொழிவுப்பணி, ஆய்வுப்பணிகட்கு இடையே இந்நூலுக்கு மதிப்புரை வழங்கிச் சிறப்பித்துள்ளார்கள். இவர்களது கனிந்த அன்புக்கு என் பணிவன்பு கலந்த நன்றியையும் வணக்கத்தையும் செலுத்தி மகிழ்கின்றேன்.

தன்னார்வமுடன் இந்நான்காம் பதிப்பு வெளிவர, அச்சுப்பணி ஏற்றுப் போற்றியுள்ள இலால்குடி சின்னசெட்டித்தெரு பெரியவர் திருமிகு. நா. **சம்பந்தமூர்த்தி செட்டியார்** அவர்கட்கும், என் மாப்பிள்ளை திருமிகு.சொ. **இராசமாணிக்கம்** பி.காம்., அவர்கட்கும் இவரது வாழ்க்கைத் துணை நலமும் என் தங்கையும் ஆகிய திருமதி.மரகதம் **இராசமாணிக்கம்** எம்.ஏ., அவர்கட்கும் குடும்பத்தார்க்கும் என் பணிவன்பு கலந்த வணக்கமும் நன்றியும் உரியன.

இந்நூல் வெளிவர, சிறந்த முறையில் இதன் மெய்ப்புத் திருத்தித் தந்து உதவியுள்ள குன்றக்குடி ஆதீனப்புலவர் இனிய நண்பர் கவிஞர். மரு.பரமகுரு அவர்கட்கு என் அன்புகலந்த நன்றியும் வணக்கமும் உரியன.

இந்நூல் சிறந்த முறையில் வெளிவர உதவியுள்ள குன்றக்குடி சண்முகநாதன் அச்சக மேலாளர் பழ. பாண்டித்துரை, மற்றும் அச்சக நண்பர்கட்கும் என் நன்றி உரியது.

அன்புள்ள

**க. கதிரேசன்**

குன்றக்குடி ஆதீனப்புலவர்

பூவாளூர்

14.11.2013



உ

சிவ சிவ

'தன் கடன் அடியேனையும் தாங்குதல்
என் கடன் பணிசெய்து கிடப்பதே'

தவத்திரு
**குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்**

குன்றக்குடி - 630 206
சிவகங்கை மாவட்டம்
% : 04577 - 264227

## வாழ்த்துரை

திருஞானசம்பந்தர் வழிபட்டு மகிழ்ந்ததும், அப்பர் பெருமான் 'பண்டெழுவர் தவத்துறை' - என்று போற்றிச் சிறப்பித்ததும், திருமகள், கண்ணபிரான், வயிரவி, குபேரன் ஆகியோர் வரம்பல பெற்றதும் மழவ அரசன் தனது வெண்குட்ட நோய்தீர்தற்கும், வரம்பல பெற்றதற்கும் காரணமானதும், மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்களின் பிள்ளைத்தமிழ் மூலம் புகழ்பெற்றதும், 'அருட்கவி' 'வரகவி' - என்று போற்றப்பெறும் ந. அழகர்சாமி பிள்ளையவர்கள் இயற்றிய அந்தாதி பெற்றதும் சங்கீத மும்மூர்த்திகளில் ஒருவராகிய தியாகையர் பஞ்சரத்ன கீர்த்தனை பாடித் துதித்ததும் ஆகிய பல்வேறு சிறப்புக்கள் பெற்றது, திருச்சிராப்பள்ளி மாவட்டம் இலால்குடி வட்டம், இலால்குடி என்று வழங்கப்பெறும் திருத்தவத்துறையில் உள்ள அருள்தரு 'எழுமுனிவர்க்கு இறை' எழுந்தருளிய திருக்கோயில்.

இங்கு எழுந்தருளி, வேண்டுவார் வேண்டுவதே வழங்கி அருள்புரியும் முழுஞானப் பெருக்காய் விளங்குபவர் அருள்தரு பெருந்திருப்பிராட்டியார், இப்பிராட்டியார், பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப்பரிந்த பேரன்பு உடையவர். குறைவில்லா நிறைவாகிய அருள்தரு பெருந்திருப் பிராட்டியாரைப் பற்றிக் கலைப்பெரும்புலவர் அருட்கவி வரகவி அழகர்சாமிபிள்ளை பாடிய அந்தாதிக்கு, நம் குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனப் புலவர் தமிழாகரர், சைவத்தமிழ்மணி, சித்தாந்தச் செல்வர், **க. கதிரேசனார்** விளக்கவுரை தீட்டியிருப்பது பெருஞ்சிறப்புக்கும் போற்றுதலுக்கும் உரியது. ஆன்று அவிந்து அடங்கிய கொள்கைச் சான்றோராக,

நுண்மாண் நுழைபுலம் பெற்ற பேரறிஞராக, எழுதும் ஏடு எல்லாம் தமிழ் மணக்கும் பாடலாகப், பாடும் வல்லமை பெற்றவராக விளங்கும் 'தமிழாகரர்' ஐயா கதிரேசனார் விளக்கஉரை தீட்டியிருப்பது அற்புதச் சிறப்புக்குரியது. இந்நூல் வெளியிட நிதி உதவி செய்யும் இலால்குடி திருமிகு. **நா. சம்பந்தமூர்த்தி செட்டியார்,** திருமிகு. **சொ. இராசமாணிக்கம்** பி.காம்., திருமதி. **மரகதம் இராசமாணிக்கம்** எம்.ஏ., ஆகியோர்க்கும் இவர்தம் குடும்பத்தார்க்கும் நல்வாழ்த்துக்கள்.

நம் ஆதீனப் புலவர் தமிழாகரர் க. கதிரேசனார் பணி சிறக்க நல்வாழ்த்துக்கள்.

என்றும் வேண்டும் இன்ப அன்பு



உ

குருபாதம்

தந்தை தாயும் நீ; என்னுயிர்த் துணையும் நீ
சஞ்சல மதுதீர்க்க
வந்த தேசிக வடிவும் நீ; உனையலால்
மற்றொரு துணை காணேன்;
அந்தம் ஆதியும் அளப்பருஞ் சோதியே!
ஆதியே! அடியார்தம்
சிந்தை மேவிய தாயுமா னவன்எனும்
சிரகிரிப் பெருமானே!

**- ஸ்ரீ தாயுமான சுவாமிகள்**

முனைவர். **ஸ்ரீமத் மௌன குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள்**
கட்டளை விசாரணை
தருமையாதீனம் ஸ்ரீ மௌன மடம் - மலைக்கோட்டை
திருச்சிராப்பள்ளி - 620 002. போன் : 0431 - 2702472

**ஆசியுரை**

பயன்கொள வேண்டில் புலைகொலை நீக்கிப் பயம் தவிர்த்து
அயன்மனை மாதர்அ வாவறுத்(து) ஆணவம் அற்றுநின்று
நயனுடைச் சொல்லொடும் இன்முகம் காட்டி நடுநிலைத்து
மயல்மிகும் போது)அந்த மாதாவின் நாமத்தை வாழ்த்துவீரே.

திருத்தவத்துறை வைப்புத்தலமாகப் போற்றப்பெறுவது. 'அழைத்து வாழ்வித்த பெருமான்' என்ற இப்பெயரே இறைவனின் தண்கருணைப் பெருக்கைக் காட்டுவது. அம்மைமீது பிள்ளைத் தமிழும் அந்தாதியும் போற்றி அமைந்தவையாகும்.

சிற்றிலக்கிய வகையில் அந்தாதியும் ஒன்றாகும். 'அந்தம் முதலாத் தொடுப்பது அந்தாதி'. அதாவது முன்னைய பாடல் கடைசி வரியின் எழுத்தோ, சொல்லோ கொண்டு அடுத்த பாடல் தொடக்கம் அமைவது. இவ்வாறு நூறு பாக்கள் அமைவது; காப்பு, பயன் எனத் தனியே படைப்பதாகும்.

இவ்வகையில் திருத்தவத்துறை 'அருள்தரு பெருந்திருப்பிராட்டியார் அந்தாதி' அருட்கவி ந. அழகர்சாமி அவர்களால் பாடப்பெற்றது. இது மூன்று முறை வெளிவந்திருப்பினும்,

இப்பொழுது நமது பாராட்டுதலுக்கும், அன்பிற்குமுரிய சைவத்தமிழ் மணி வித்வான் கதிரேசனார் அவர்கள் உரை விளக்கம் கண்டிருப்பது மேலும் சிறப்புக்குரியது.

மூல நூல் ஆசிரியர் உள்கருத்தை வெளிக்கொணர வேண்டுமானால் உரையாசிரியர் விளக்கவுரை தேவை. அதுவும் மரபுநிலை மாறாது நுண்மாண் நுழைபுலனறிவுடையோருக்கே தகும். அவ்வகையில் பனசைத் தமிழ்க் கல்லூரியில் பயின்று குன்றை ஆதீனத்தில் வளர்ந்து சமய மரபு மாறாது இருக்கின்றவர் உரையாசிரியர் கதிரேசனார் அவர்கள். இவர் உரையில் பலநூல் பயின்ற பாங்கும், இலக்கணச் சூத்திரமும் சாத்திரப் பயிற்சியும் ஆங்காங்கே தாமே வரும்.

'அருள்தரு பெருந்திருப்பிராட்டியார்' அந்தாதி; 'அபிராமி அந்தாதி' போன்றே உதிக்கின்ற எனத் தொடங்கி உதிக்கின்றதே! என்று நூறாவது பாடலில் நிறைவாகிறது. சொல்லாட்சியும், கருத்தாட்சியும் அப்படியே அமைந்திருக்கின்றன.

'போற்று தமிழ் சாதித்த நான்மறை' என்ற வரிக்கு உரையில் உரையாசிரியர் தமிழ் மொழிப்பற்று மிக்கு வெளிப்படுகிறது.

'உதிக்கின்ற செங்கதிர் உச்சித்திலகம் மதிக்கின்ற - மாணிக்கம்' இந்நூலாசிரியரும் 'உதிக்கின்ற ஞாயிறு - மதிக்கும் தவத்துறை மாணிக்கவல்லி' என்பது தொடங்கி அனைத்திற்கும் ஒப்புமை காட்டியிருப்பது சிறப்புக்குரியது.

'சங்கரர்க்கு நம்பிக்கையான மனைத் திருவாட்டி' என்ற வரிக்கு 'எத்திறம் நின்றான் ஈசன்.... நங்கையினால் நாமனைத்தும்' என்று தொடங்கும் சாத்திரங்களைக் காட்டியிருப்பதில் உரையாசிரியரின் சாத்திர நூல் ஞானம் வெளிப்படுகிறது.

'பாட்டினுக்கும் நிறை ஒன்றும் ஒத்தொலியாம்' என்பதற்கு பல மேற்கோள் காட்டியிருப்பதும் சிறப்புக்குரியது. அபிராமி பட்டரும் 'இசைவடிவாய் நின்ற நாயகியே' என்பதும் 'ஏழிசையாய் இசைப் பயனாய்' என சுந்தரர் காட்டுவதும் சிந்திக்கத்தக்கன.



'நெஞ்சகத்தைக் கல் என்று இராமல்' என்பதற்கு 'நெஞ்சக் கனகல்லும் நெகிழ்ந்து உருக' என்பார் அருணகிரியாரும்.

'விழி' - இடவாகுபெயர். ஏழ் இசை - தொகைக்குறிப்பு. 'பொலிசையாய்' என்று நின்றது செய்யுள் விகாரம், கார் - பண்பாகுபெயர். 'உன்னையும்' - எதிரது தழுவிய எச்சவும்மை, கடல் ஞானம் - உவமைத் தொகை, என பல இடங்களில் இலக்கணக் குறிப்புகள் காட்டுதலில் உரையாசிரியரின் இலக்கண ஞானம் மிளிர்கின்றது.

'பகைத்தெழுந்த சயம் கொண்ட 'மகிடனைச் சாய்த்து' என்பதற்கு 'கருங்கோட்டு மோட்டு மயிடங் கவிழ்த்துக் கடாங் கவிழ்க்கும்' என்று குமரகுருபரரும் காட்டுவார்.

'பஞ்சவண்ணத்தி' - ஐவண்ணநாதர் விளக்கம் சிறப்பு. அப்பரடிகளும் 'ஐது வண்ணமும் ஆவர் ஐயாறரே' என்பார்.

'விழித்துறங்கல்' விளக்கத்தில் 'பிறவற்றில் உறக்கமும், அம்மை பற்றிய நினைப்பில் விழிப்பும்' என்பது பொருள் என்றது சிறப்புக்குரியது. 'தூங்காதார் மனத்திருளை வாங்காதானை' என்பார் அப்பரடிகளும்,

'இடம்எது - என்ற பாடலுக்கு 'அறிந்த நெறி பூசனை' என்பதைக் காட்டுவது போல ஞானசம்பந்தரும் 'வந்த வண்ணம் செய்தல் வழிபாடே' என்றும், 'ஆமளவும் தொழுவார் எழுபாருக்கும் அதிபரே' என அபிராமி பட்டரும் காட்டுவார்.

'சூழுங்கள் நல்லறமே துணை' என்பதற்குச் சுந்தரரும் 'வாழ்வாவது மாயம்... தாழாது அறம் செய்மின்' என அறிவுறுத்துகின்றார்.

'வெல்லுக வஞ்சப் புலன்வழி மேற்கொள்ளும் வீண் மயக்கம்' என்பதற்கு - 'பொறிகளிலும் புலன் கொடியவை' எனக் காட்டியது நயமாகும். சம்பந்தரும் 'தொண்டர் அஞ்சுகளிறும் அடக்கி' என்பார்.

'கற்பன நல்லன தீயன ஈதென்று கண்டு நெறி' என்பதற்கு நற்கல்வி சிவலோகம் ஈங்குறப் போதிக்கும் என்பதில் உரையாசிரியர் உயர்குணம் ஒங்கி நின்றது. எமது ஆச்சாரியரும்,

'கற்க ....நற்கருணை வெள்ளம் அடங்கும் விரிசடையார்க்கு ஆளாகி உள்ளம் அடங்க அல்லவோ' என்றார். தீயன கற்றால் நரகத்தில் உழல்வார் என்பதை அருணகிரியாரும், 'காதிமோதி வாதாடு நூல் கற்றிடுவோரும்.... மாறிலா மாகாலன் ஊர்புக்கு அலைவாரே' என்பார். இறைவனை, 'அறம், பொருள், இன்பம், வீடு மொழிந்த வாயான் முக்கண் ஆதி' என சம்பந்தர் காட்டுவார்.

'அன்பு செய்திட்டு வாழ்கின்ற நல்லோர்' - இதற்குக் குமரகுருபரரும் 'அரும்பிட்டுப் பச்சிலையிட்டு ஆட்செய்யும் அன்னையவள் தரும்பிட்டுப் பிட்டுண்டாய் தலையன்பில் கட்டுண்டே' என்பார்.

'நயனுடைய இன் சொல்லொடும்' - என்பதற்கு திருமூலரும் 'யாவர்க்குமாம் பிறர்க்கு இன்னுரைதானே' என்பார். மேலும் சம்பந்தரும் 'இயமன் தூதுவர் அஞ்சுவர் இன்சொலால்' என்றார்.

'எந்நேரம் தன்னிலும்' என்பதை 'நின்றாலும், கிடந்தாலும், நடந்தாலும் சங்கரன்தாள் மறவாமை பொருள்' எனச் சேக்கிழார் காட்டிப் போந்தார்.

ஒதுங்கள் கூற்றுவன் தூதரும் ஓலை கொண்டு ஓடிவந்தால் மோதும் படிக்கு அன்று சூலத்தை ஏவி முறியடிப்பாள்' என்றார். இதற்கு 'கேடாவரும் நமனைக்கிட்டே வாராதே போடா என ஓட்டிப் பொற்கமலக்கால் கீழ்வாடா என அழைத்து வாழ்வித்தால் கூடாதென்று யார் தடுப்பார் கோமதித்தாய் ஈஸ்வரியே' என்றார்.

'தூக்கிய முத்திரைத்தன் பொருள் காண்க' என்பதற்கு மரபு வழிமாறாது உரை கண்டது மிகவும் போற்றற்குரியது. அனைவரும் கட்டைவிரல் நுனியைச் சுட்டு விரல் நுனி தொடுவது போன்றே படமும், உருவமும் அமைப்பர். அது தவறு. தாள் + தலை = தாடலை என்பது இறைவனின் திருவடியை ஆன்மா அடைதலையே காட்டுவதாக அமையவேண்டும். இதனை

'மும்மலம் வேறுபட்டு ஒழியமொய்த்து உயிர்
அம்மலர்த்தாள்கீழ் அடங்கும் உண்மையைக்
கைம்மலர் காட்சியில கதுவ நல்கிய
செம்மலை அலது உளம் சிந்தியாது அரோ'

என்ற பாடலும் உணர்த்தும்.



இறைவியைப் போற்றாத, பேசாத, பாடாத நாட்கள் எதற்கு? ஏன் உடலில் உயிர் வைத்தாய் என கேட்பதற்குரிய மேற்கோள்கள் அமைவு பெறுகின்றன. அப்பரடிகளும் 'துன்பம் நும்மைத் தொழாத நாட்கள் என்பாரும்' என்றும்; சுந்தரர் 'சிட்டன் நும்மடி மறந்திட்ட நாள் கெட்ட நாள்' என்றும் காட்டுவது சிந்திக்கத்தக்கது.

'நன்மலர்ப் பாதத்தை உன்னுகின்றேன் ஓலை கொண்டே நமன் தூதர் வந்தால் விழுந்து ஓடுதற்கே' என்பதில் 'உகந்த பாசக் கயிறொடு தூதுவர் நலியாதே அசந்த போது என்துயர் கெட மாமயில் வரவேணும்' என அருணகிரியாரும் காட்டுவார்.

இன்னோரன்ன எடுத்துக் காட்டுகள் மூலம் நிருபித்து உரை விளக்கம், பொழிப்புரை, குறிப்புரை, இலக்கணம் மேற்கோள் என உரையாசிரியர் தனக்கே உரிய நுண்மாண் நுழைபுல அறிவால் கண்டிருக்கிறார்.

இந்நூலின் அச்சுப் பணியினை ஏற்றுப் போற்றி இருக்கின்ற இலால்குடி திருமிகு. **நா. சம்பந்தமூர்த்தி செட்டியார்**, திருமிகு. **சொ.இராசமாணிக்கம்** பி.காம்., திருமதி. **மரகதம் இராசமாணிக்கம்** எம்.ஏ., ஆகியோர்க்கும் இவர்தம் குடும்பத்தினர்க்கும் இனிய நல்வாழ்த்துக்கள்.

காலத்திற்குத் தேவையான சூழ்நிலையில் இலக்கியங்களை வெளிக்கொணர வேண்டுமென்ற அவாவின் காரணத்தால் 'தன் முதுமை நிலையிலும் பல இலக்கிய நூல்களுக்கு உரைகண்டு வருகின்ற வரிசையில் இதுவும் ஒன்றாக நிகழ்கின்றது. அன்பர்கள் படித்துச் சுவைத்து இன்புறவும், அம்மையின் அருள் பெறவும், 'அழைத்து வாழ்வித்த பெருமான்' அருள் கிட்டவும் உரையாசிரியர் கதிரேசன் மேலும் 'ஆயும் பழைய அடியாருடன் இருந்து' செந்தமிழ்ச் சுவையை உண்டு நமக்களிக்கவும் செந்தமிழ்ச் சொக்கநாதப் பெருமான் திருவருளையும் தருமையாதீனக் குருமணியின் குருவருளையும் சிந்திக்கின்றோம்.

---

## மதிப்புரை

தமிழாகரர். சித்தாந்தச் செம்மணி.
முனைவர். **பழ. முத்தப்பன்**
செட்டிநாடு கலை,அறிவியல் கல்லூரி முதல்வர் (ஓய்வு)
திருச்சி.

சைவத் திருமுறைகளுக்கு முன்னோடியாக விளங்கியவர் காரைக்கால் அம்மையார் ஆவார். அவருடைய அற்புதத் திருவந்தாதி தமிழ்ச் சிற்றிலக்கியங்களுக்கு வழிகாட்டியாக விளங்குவதாகும். சிற்றிலக்கியங்களில் அந்தாதியாக நூறு பாடல்களைப் பாடிப் போற்றுகின்ற வழக்கம் தொன்று தொட்டுத் தமிழகத்தில் வந்துள்ளது. திருத்தவத்துறைத் திருத்தலத்தில் எழுந்தருளி அருள்பாலிக்கும் பெருந்திருப்பிராட்டியார் மீது அருட்கவிஞர் சோதிடர் அழகர்சாமி பிள்ளை அவர்கள் அந்தாதி நூல் ஒன்று பாடியிருக்கின்றார்கள். பாடப்பெற்ற காலம் உருண்டோடிட இப்போது அந்நூலுக்கு அற்புதமான உரை ஒன்று வெளிவந்திருக்கின்றது. உரையாசிரியர் குன்றக்குடி ஆதீனப் புலவர். தமிழாகரர். சித்தாந்தச் செல்வர், வித்துவான் க. கதிரேசன் ஆவார்கள். அண்மைக் காலமாகப் பல சிற்றிலக்கியங்களைப் பதிப்பிப்பதும், அவற்றை உரையோடு வெளியிடுவதும் தம் வாழ்வியல் பணியாகக் கதிரேசனார் செய்து வருகிறார்கள். அவர்தம் தமிழ்ப் பணியில் இவ்வுரை நூல் குறிப்பிடத் தக்க ஒன்றாகும்.

நூற்று நான்கு பாடல்கள் கொண்ட இந்நூலுக்குக் குறிப்புரையும் பொழிப்புரையும் எழுதி. சத்தியின் திருவருளைப் பெறுவதற்குப் புலவர் அவர்கள் அடிகோலியிருக்கிறார்கள். பல நூல்களுக்கு உரை எழுதிய பயிற்சியால் மூல பாடத்தின் பொருள் சிதையா வண்ணமும் பாடிய கவிஞரின் கருத்துக்கு மாறுபடா வண்ணமும் உரையெழுதியிருக்கின்ற சிறப்பையும் இந்நூலில் காண முடிகின்றது. ஐந்தாவது பாடலுக்குப் புலவர் அவர்கள் உரையெழுதும் பொழுது 'மாத்திப் பிறக்கும் வகையறிவார்' என்ற தொடருக்கு மிகச் சிறப்பான உரை தந்திருக்கிறார்கள். சங்க இலக்கியப் புறநானூற்றுத்



தொடரையும், சித்தாந்த சாத்திர நூலான சிவஞான சித்தியாரின் தொடரையும் மேற்கோள் சான்றுகளாகக் காட்டி. உயிர்கள் இறந்து பிறந்து வருவதைச் சுட்டிக் காட்டியிருக்கின்ற திறம் பாராட்டுதலுக்கு உரியதாகும்.

நாற்பத்து மூன்றாவது பாடலுக்கு. உரிய உரையில் அம்பிகைக்கு ஆற்றும் தவம் பிறர் வயிற்றுக்குச் சோறிடல் ஆகும் என்ற கருத்தைச் சுட்டிக் காட்டும் பொழுது. மணிமேகலை வரிகளை மேற்கோளாக எடுத்துக் காட்டியிருப்பது புலவர்தம் இலக்கியப் பயிற்சியை மெய்ப்பிக்கிறது. நாற்பத்து நாலாவது: இலக்கியப் பயிற்சியை மெய்ப்பிக்கிறது. நாற்பத்து ஏழாவது பாடலில் இடம் பெற்றுள்ள 'முணு முணுத்து' என்ற சொல்லுக்கு நயம் கூறும்பொழுது 'மந்திரங்கள் உதடு பிரியாமல் சொல்ல வேண்டும் ஆதலால் முணுமுணுத்து எனப்பட்டது' என்ற உரை, நயம் தரும் உரையாகும். அறுபத்து ஐந்தாவது பாடலில் அருட்பாவை மேற்கோளாகக் காட்டி உரை. தந்திருப்பது புலவருக்குத் தற்கால இலக்கியங்களிலும் பயிற்சி உண்டு என்பதை நிருபிக்கிறது. இவ்வாறு இலக்கிய நயம் புலப்பட உரை எழுதுவதோடு தத்துவப் பொருளை உரையில் இடம்பெறச் செய்வதும் புலவருக்கு உரித்தாகும் என்பதைப் பல இடங்களில் காணமுடிகிறது.

பதினோராவது பாடலுக்கு உரையெழுதும் பொழுது முத்தி நிலையில் உயிர் எவ்வாறு இருக்கிறது என்பதைப் புலவர் தெளிவாக எளிமையாகக் குறிப்பிடுகிறார்கள். பல இடங்களில் திருமந்திரத் தொடர்களை மேற்கோளாகக் காட்டித் துறைக்கு விளக்கம் தருவது குறிப்பிடத் தக்கதாகும். முப்பத்து நான்காவது பாடலின் உரையில் திருமந்திரம், சித்தியார், திருக்குறள், திருவருட்பயன், சிவஞானபோதம் ஆகிய நூல்களின் மேற்கோள்களை ஒருசேரத் தொகுத்துக் காட்டியிருப்பது புலவர் அவர்களின் நுண்மாண் அறிவைக் காட்டுகிறது.

இந்நூலினை அச்சிட்டுத் தரும் பொறுப்பேற்றிருக்கும் இலால்குடி திருமிகு. **நா. சம்பந்தமூர்த்தி செட்டியார்**, திருமிகு. **சொ.இராசமாணிக்கம்** பி.காம்., திருமதி. **மரகதம் இராசமாணிக்கம்** எம்.ஏ., ஆகியோர்க்கு மேலும் இறையருள் வாய்க்க நல்வாழ்த்துக்கள்.

இவ்வாறு தற்கால உரையாசிரியர்களில் குறிப்பிடத் தக்கவராக விளங்கும் குன்றக்குடி ஆதீனப் புலவர் அவர்களின் ஆழ்ந்த தமிழ்ப் புலமைக்கும், தமிழ் இலக்கியப் பயிற்சிக்கும் இலக்கண ஞானத்திற்கும் எடுத்துக் காட்டாக இந்த உரை நூல் விளங்குகிறது என்பது உண்மை. தமிழ்ச் சமயச் சான்றோர் இந்நூலின் பயன்கொண்டு, அருள்தரு பெருந்திருவாட்டியின் அருள் பெற முயல்வாராக. உரையெழுதிய அன்புக்குரிய வித்துவான் க. கதிரேசனார் அவர்களும் இறையருளால் பல்லாண்டு வாழ்ந்து தமிழுக்குத் தொண்டு செய்வார்களாக.



## அட்டைப்பட விளக்கம்

"நீலமேனி வாலிழை பாகத்து ஒருவன்" என்றும், "பெண்உரு ஒருதிறன் ஆகின்று அவ்வுரு, தன்னுள் அடக்கிக் கரக்கினும் கரக்கும்" என்றும் நம் செவ்வியல் தமிழ் இலக்கியங்களில் போற்றப் பெறுகின்றவன், "பிறவா யாக்கைப் பெரியோன்" ஆகிய நீலமணிமிடற்று ஒருவன் - சிவபெருமான். இப்பரம்பொருள் "சிவம்" என்றும் "சத்தி" என்றும் இருகூறுகளாக அமைந்து நமக்கு அருள் பாலிக்கின்றது.

இச்சிவ பரம்பொருளைப் "பொருள்" என்றும், பராசத்தியை, சத்தி - "ஆற்றல்" என்றும் குறிப்பதுடன் பொருளும் ஆற்றலுமாகிய இவை இரண்டும் ஒன்றோடொன்றாய் இணைந்தும் கலந்தும் நிற்பன என்பது நம் சைவசித்தாந்தத் தெளிபொருள். இதனை,

"நின்அலாது அவளில்லை அவள்அலால் நீயில்லை
என்னின் நீயே அவனும் அவளுமாய் இருத்தியால்"
- சிதம்பரச்செய்யுட்கோவை

என்பார் ஸ்ரீ குமரகுருபர அடிகள்.

"உலகியல் பொருள்கள் அனைத்தும் பொருள்நிலையோடுகூட, அதனுள் பிரியாதும், அதனுள் செறிந்தும், நிற்கும் நிலையான ஆற்றலும் உடையன; பொருள் இல்லாது ஆற்றல் இல்லை, ஆற்றல் இல்லாது பொருளும் இல்லை" என்ற அறிவியலை உட்கொண்டது மேற்கண்ட ஸ்ரீகுமரகுருபரர் செய்தி.

பொருள் என்று சுட்டப்பெற்ற சிவபரம்பொருள், தான் வழங்கவிருக்கும் வற்றாமுற்றாப் பேரின்பத்தைத் துய்ப்பதற்குரிய தகுதிகளாகிய - பக்குவ நிலைகளாகிய இருவினை ஒப்பு, மலபரிபாகம், திருவருட்சத்தி பதிவு ஆகியவற்றை, தன்னைப் பிரியாத ஆற்றலாகிய பராசத்தியின்மூலம் நம்மிடை உண்டாகச் செய்கிறது. இவ்வகையில் அப்பனுக்கு முன்னதாக நமக்கு அருள்புரிபவள் அம்மை. இதனை

"முன்னி அவள் நமக்கு முன்சுரக்கும் இன்னருள்"
- திருவெம்பாவை.16

என்ற மணிவாசகர் வாக்கு எடுத்தியம்புகிறது.

பட்டினத்தார்;

"தாயுடன் சென்று பின் தாதையைக் கூடித் தாயை மறந்து
ஏயுமதே நிட்டை என்றான் எழில்கச்சி ஏகம்பனே" என்கிறார்.

இலக்கியங்கள் கூறும் இச்செய்தியை இலக்கணமாக விளங்கும் திருக்களிற்றுப்படியார்

"நங்கையினால் நாம் அனைத்தும் செய்தாற்போல் நாடனைத்தும்
நங்கையினால் செய்தளிக்கும் நாயகன்" - என்று
உவமைச்சுவையுறக் கூறுகிறது.

(நாம் விரும்பும் அனைத்தையும் நம் கையினால் (நம் + கையினால்) செய்வதுபோலத் தான்விரும்பும் அனைத்தையும் தானே முற்பட்டுச் செய்யாமல் தன் இடப்பங்கில் உள்ள (நங்கை) பராசத்தியின் மூலம் செய்து கருணை புரியும் தலைவன்)

இவ்வன்னை தொழிற்படும் நிலையும் உண்டு. தொழிற்படாது உள்ள நிலையும் உண்டு. இவள் தொழிற்படாதநிலை, பரம்பொருளின் முற்றழிப்புக் காலம் - கடையூழிக்காலம். தொழிற்படும் நிலை, படைப்பு - முதல் அருளல் ஈறான ஐந்தொழிலில் ஈடுபடும் காலம். இவளது இவ்விரு நிலைகளையும் ஒருசேர உணர்த்துவது;

"உடையாள் உன்றன் நடுவிருக்கும்.
உடையாள் நடுவில் நீ இருத்தி" - திருவாசகம்-376

என்ற மணிவாசகத் தொடர்.

"உடையாள் உன்றன் நடுவிருக்கும்" என்ற தொடர்; கடையூழிக்காலத்தில் அனைத்துப் பொருள்களும் அனைத்து உயிர்களும் தன்னுள் அடங்க, அம்மை தான் பரம்பொருளின்கண் அடங்கியிருக்கும் காலம். இதனைச் "சிவம் தானாய் நின்று சத்தியைத் தன்னகத்தடக்கி நிற்கும் நிலை" என்பர். இந்நிலையில் சத்தியின் அருளிப்பாடு தொழிற்படாது அவனுள் அமையும்.

"உடையாள் நடுவுள் நீ இருத்தி" என்ற தொடர் அம்மையின் நடுவுள் அப்பன் மேவித் தனி நடத்தும் நிலை - படைப்பு முதல் அருளல் ஈறான ஐந்தொழில் நடத்தும் நிலை இது. இதனைச் "சத்தியுள் சிவம் அடங்கி நின்று ஐந்தொழில் நடத்தும் அருள் நிலை" என்பர். இந்நிலையில் நம்பொருட்டுப் பரம்பொருள்; படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்ற ஐந்தொழில் நிகழ்த்துகிறது.



இத்தொழில் ஐந்தும் நம் ஈடேற்றத்துக்கு உதவுவன. இவ்விரு தொடர்களையும் "சிவசிவ" என்கிற மகாமனுவில் - மகாமந்திரத்தில் அமைத்தும் இச்செய்திகளைக் கூறுவர்.

நம் ஈடேற்றத்துக்குரிய ஐந்தொழில் நிகழ்த்தும் நிலையினளாய், திருத்தவத்துறைத் திருக்கோயிலில் அன்னை, அருள்தரு பெருந்திருப்பிராட்டியாக எழுந்தருளியுள்ளாள். இந்நிலையில் அருள்தரு எழுமுனிவர்க்கிறையான பெருமான் அவள் நடுவில் "மேவித்தனி நடத்து"கின்றான். அருள்பொழியும் இத்திருக்காட்சி தூலலிங்கம் என்று குறிப்பிடப்பெறும் திருக்கோபுரத்தில் அம்மையும் அவள் நடுவில் அப்பனுமாக அமைந்த எழிற்காட்சியாக இந்நூலின் அட்டைப் படத்தில் இலங்குகிறது.

---

உ

## திருத்தவத்துறை - இலால்குடி

## அருள்தரு பெருந்திருப்பிராட்டி உடனாய எழுமுனிவர்க்கு இறை (சப்தரிஷீஸ்வரர்) திருக்கோயில் பற்றிய குறிப்புகள்

முன்னுரை :

தமது அருள்வீச்சினால் மட்டுமன்றித் தமிழ்நாட்டில் சிறந்து விளங்கும் பழம்பெருமை வாய்ந்த திருக்கோயில்களுள் ஒன்றாகவும் விளங்குவது திருத்தவத்துறையாகிய இலால்குடி நகரின் நடுவில் அமைந்துள்ள அருள்தரு பெருந்திருப்பிராட்டி (ஸ்ரீமதி) உடனாய எழுமுனிவர்க்கு இறை (சப்தரிஷீஸ்வரர்) திருக்கோயில். நமக்கு இதுவரை கிடைத்துள்ள சான்றுகளால் இது கி.பி. 7ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்டது என்பது அறியவருகிறது.

**1. அம்மை :**

இங்கு எழுந்தருளி அருள்பாலிக்கும் பெருமாட்டி அருள்தரு பெருந்திருப்பிராட்டி (ஸ்ரீமதி) என்னும் திருப்பெயர் பூண்டவள். மங்கல முனிவரால் வளர்க்கப்பெற்று, மணப்பருவத்தில் இம்முனிவரும் இவர் மனைவியும் நீருற்றித்தர எழுமுனிவர்க்கு இறையாகிய பெருமான் ஏற்று இவரை மணந்தான் என்பது தலவரலாறு. இத்திருக்காட்சியை இவ்வம்மைமீது பிள்ளைத்தமிழ் இயற்றிய திரிசிரபுரம் மகாவித்துவான் தி.மீ.சு.பிள்ளையவர்கள் அப்பிள்ளைத்தமிழின் சப்பாணிப் பருவத்தில் அழகுற ஓவியம் தீட்டிக் காட்டுகிறார்.

'நனிஉயர்(வு) ஆன மணப்பந் தரின்மறை
நாதன் மகம்புரிய
நாரணன் முதலியர் பணிதலை நிற்ப
நயம்பெறு கணநாதன்
முனிவரர் சுரர்ஒலி செய்(து)இரு கைகள்
முகிழ்ப்பப் பல்லியம்ஏழ்
முகில்ஒலி சாய்ப்ப அரம்பையர் வாழ்த்து
முழக்கக் கடிமலர் வாழ்
வனிதையர் நின்னை அணிந்து பணிந்து
மணத்தவி(சு) ஏற்றஅவண்



மங்கல மாமுனி பன்னியொ டும்புனல்
வார்க்கம கிழ்ந்தேற்றுக்
குனிமதி வேணியர் தொட்டக ரம்கொடு
கொட்டுக சப்பாணி
கொடிகள் தவத்துறை அடிகள்இ டத்தவள்
கொட்டுக சப்பாணி!'

(பெருந்திருப்பிராட்டி பிள்ளைத் தமிழ் : சப்பாணி.8)

என்பது நாம் நம் மனத்து எழுதிப் பார்த்து மகிழத்தக்க உயிரோவியத் திருக்காட்சி. அபயவரம் அருளும் இவ்வன்னையின் அருள்நோக்கால் நல்வாழ்வு பெற்று உயர்ந்தோர் எண்ணற்றோர்.

**2. அப்பன் :**

இங்கு எழுந்தருளி அருள்பாலிக்கும் பெருமானை அருள்தரு பெருந்திருப்பிராட்டி பிள்ளைத் தமிழ் 'எழுமுனிவர்க்கு இறை' என்றும் 'அழைத்து வாழ்வித்த பெருமான்' என்றும் போற்றுகின்றது. தம்மை நோக்கித் தவமிருந்து வணங்கிய 'அத்திரி' முதலிய ஏழு முனிவர்க்கு இறை என்பது இதன் பொருள். உயிர்க்குலம் அனைத்தையும் தானே வலிய அழைத்து அருள்புரிந்து வாழ்வித்துவருகின்ற பேரருள் காரணமாக வாய்த்துள்ள பெரும்பெயர் 'அழைத்துவாழ்வித்த பெருமான்' என்பது. இப்பெருமானின் அருள்நோக்கினைக் குறிக்கும் இத்திருப்பெயரைப் பெருந்திருப்பிராட்டி பிள்ளைத் தமிழில் மகாவித்துவான் தி.மீ.சு. பிள்ளையவர்கள்

'மாசில வருக்குள் ஒளியாய் விளங்கும் அப்பனை
அழைத்துவாழ் வித்தபெரு மானைப் பழிச்சுதும்'

- பா.13:12

'இறைவர் அழைத்து வாழ்வித்தவர் திருப்புகழும்'

- பா. 112:3

என்று இரண்டிடங்களில் போற்றி மகிழ்கிறார்; நம்மை மகிழ்விக்கிறார்.

**3. தீர்த்தங்கள் :**

இத்திருக்கோயில் தீர்த்தங்கள் இரண்டு. அவை இத்திருக்கோயிலுக்குத் வடபால், காவிரிக்குத் தென்பால் ஓடும் கொள்ளிடமும், இத்திருக்கோயில் உள்ளே அமைந்துள்ள சிவகங்கையும் ஆகும். மகாவித்துவான் அவர்கள் கொள்ளிடம் பற்றி நீராடற் பருவத்தில் கொள்ளிடம் காவிரிக்குத் தெற்கே ஓடுவதால்

கோயிலுக்கு வடக்கே உள்ள அக்கொள்ளிடத்தை 'வடகாவிரி' என்று பாடல்களில் மகுடம் அமைத்துக் கூறுகிறார். அம்மையிடம்

'வடகாவிரிநீர் ஆடுகவே' - (பா 98 - 102) என்று வேண்டுகிறார்.

பிறிதொரு தீர்த்தமாகிய சிவகங்கை, இத்திருக்கோவிலுட் செல்லும் வழியில் வலப்புறம், பெருமாட்டியின் சந்நிதிக்குப் பின்புறம் அமைந்துள்ளது. இதனை மகாவித்துவான் அவர்கள், இப்பிள்ளைத் தமிழில்

*'மன்னுமா தீர்த்தம் ஆகிப்*
*பொங்குசிவ கங்கையில் பைங்கதிரின் மேவுருப்*
*பொலிய உற்(று) உறைதலால்'*

- பா. 73:2

என்கிறார்.

**4. ஐம்புண்ணியத்திருத்தலம் : (பஞ்ச புண்ணியத்தலம்)**

புண்ணியங்களுள் தலைசிறந்த புண்ணியம் பிறரை வாழ்விப்பது. இவ்வகையிலான உணவுக் கொடை, பொன் கொடை, பசுக்கொடை, நிலக்கொடை, மகட்கொடை இவை ஐந்தினையும் நடத்திய பெரும்புண்ணியம் இப்பெருமாட்டியையும் பெருமானையும் வழிபடுவதால் அடையலாம் என்பார். இதனைப் பிள்ளைத்தமிழ்

*'கரிசு அறும் தெய்வத்தலம்*
*எமைஆள்தரும் பஞ்சபுண் ணியத்தலம்என்று*
*இயம்பு நான்மறை'* - (பா.80 2-3)

(கரிசு அறும் = பாவத்தை அறுத்துத் தொலைக்கும்)

என்கிறது.

**5. பாடியும் பரவியும் பேறு பெற்றோர் :**

**1. திருஞானசம்பந்தர்**

கி.பி. 7ஆம் நூற்றாண்டினராகிய திருஞானசம்பந்தர் இத்தலத்துக்கு வந்திருந்து பெருமானைப் பாடிப் பரவியுள்ளார் என்பது பெரியபுராணம் தரும் வரலாற்றுச் செய்தி.

*'மன்னும் தவத்துறை வானவர்தாள்*
*எய்தி இறைஞ்சி எழுந்து நின்றே*
*இன்தமிழ் மாலைகொண்டு ஏத்திப் போந்து'*

- (பா.22-50)

என்பதில் 'இறைஞ்சி எழுந்து நின்றே' என்ற தொடர், தம் திருமேனியின்



எட்டு உறுப்புகளும் நிலம் தோய விழுந்து வணங்கியதையும், 'இன்தமிழ் மாலை கொண்டு ஏத்தி' என்பது பதிகம் பாடி வணங்கியதையும் குறிப்பன. ஆயினும் நம் பெருங்கவனக்குறைவால் அப்பதிகத்தை இழந்தவராக உள்ளோம்.

**5.2. அப்பரடிகள்**

அப்பரடிகளும் திருஞானசம்பந்தரும் ஒரே காலத்தில் உடனுறைந்தவர்கள். இவருள் வயதில் மூத்த அப்பரடிகள் தமது அடைவுத் திருத்தாண்டகத்தில்

*'பண்டெழுவர் தவத்துறை'*

என்று எழுமுனிவர்கள் பேறுபெற்றதைக் குறிப்பிட்டு இத்திருக்கோயிலைப் போற்றுகிறார். அப்பரடிகளும் திருஞானசம்பந்தரும் போற்றியுள்ளதால் இத்திருக்கோயில் அவர்கட்கு முற்பட்டது - கி.பி. 7ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்டதாகிறது.

**5.3. எழுமுனிவர்**

இங்குள்ள பெருமானையும் பெருமாட்டியையும் தவம் செய்தும் வணங்கியும் போற்றிப் பேறுபெற்ற எழுமுனிவர்கள், பிருகு, ஆங்கிரசு, வசிட்டர், காசியபர், அத்திரி, குச்சர், கவுதமர் ஆகியோர். இவர்களது திருவுருவங்கள் அழைத்து வாழ்வித்த பெருமானின் மகாமண்டப நுழைவாயிலின் தெற்கே அமைந்து வழிபாட்டில் இடம்பெறுகின்றன.

இம்முனிவர்கள் எழுவரையும், இவர்களின் மைந்தர் எழுபதின்மரையும் பூவாளூர்ப் புராண ஆசிரியர் அருட்டிரு கவிராட்சச கச்சியப்ப முனிவர் பெருமான்

*'பிருகு அங்கிரசு வசிட்டன் கசியபன் அத்திரி குச்சன்*
*பெருமை சால*
*மருவு கவுதமன் இவர்கள் எழுவரும்'*

- (5 வேள்விச்.பா.1)

என்றும்; இவர்களது மைந்தருட் சிலரை

*'மாதவர்அன் னவர்மைந்தர் பாற்கவரே ஆங்கிரசர்*
*வளர்வா சிட்டர்*
*காதல்செய்கா சிபர்ஆத்தி ரேயர்கவுச் சர்கள்கவுத*
*மீயர் என்றா*
*ஓதும் இவர் எழுபதின்மர் உடங்கிருந்து'*

- (5 வேள்விச்.பா.2)

என்று குறிப்பிடுகிறார்.

(காதல் = பக்தி)

**5. 4. மேலும் சிலர்**

இத்திருத்தலப் பெருமானையும் பெருமாட்டியையும் வழிபட்டுப் பேறுபெற்றோர் எண்ணற்றோர் - அவர்களுள் குறிப்பிடத்தக்க சிலரைப் பெருந்திருப்பிராட்டி பிள்ளைத் தமிழ் பின்வருமாறு குறிக்கிறது.

'இமையாத பவளச் சரோருகக் கண்ணனும்
இருநிதிக் குரிய கோவும்
இருடியர் எழுவரும் வயிரவியும் நன்புகழ்
இலக்குமியும் இன்னும் அளவில்
கமைஆர் தவத்தினரும் ஆகமப் படிபூசை
கடவுளை இயற்றி உள்ளம்
கருதரும் பேறு(ு)எண்ணி அங்(கு)உறப் பெற்றஇக்
கரிசுஅறும் தெய்வத்தலம்'

- (பா.80.1-2)

திருமாலின் திருமார்பினைப் பிரிந்த திருமகள், இத்தலப் பெருமானையும் பெருமாட்டியையும் முறைப்படி வழிபட்டு அப்பேற்றினை மீண்டும் பெற்றாள் என்பதை 'நன்புகழ் இலக்குமியும்' என்ற தொடர் குறிப்பால் புலப்படுத்துகிறது. இச்செய்தியைப் பெருந்திருப்பிராட்டி அந்தாதி விரிவாக,

'திருவே பிரிந்ததன் தெய்வநன் மார்பினைச் சேரஎன்று
திருவே அந்நற் றவம்ஆற்றித் துதித்திடச் சிந்தை கண்டு
திருவேய்ந்த மாலுடன் பொன்னிக்கு நன்மணம் சேர்த்துவைக்கும்
திருவார் தவத்துறைத் தெய்வம்உண்(டு) என்னைச் சிறப்பிக்கவே'.

(பா.80)

என்கிறது.

அளகேசன் என்று அழைக்கப்பெறும் குபேரன் இப்பெருமானையும் பெருமாட்டியையும் வணங்கிப் பேறுபெற்றதால் இவ்வூர் 'அளகாபுரி' என்றும் வழங்கப்பெறும் என்பது தலபுராணச் செய்தி.

**5.5. மழவ மன்னன்**

மழவ மன்னன் ஒருவன் தன் ஆசிரியரின் மனைவியைப் புணர்ந்ததால் வெண்குட்டமும் பாவமும் ஏற்பட, அவை தீர்க்கத் தீர்த்த யாத்திரை செய்தும் அவை தீராத நிலையில் இங்கு வந்து சிவகங்கைத் தீர்த்தத்தில் நீராடி, இவ்விறைவனையும் இறைவியையும் முறைப்படி



வணங்கிப் பாவமும் வெண்குட்டமும் தீர்ந்தான்; பேறுபல பெற்றான் என்பதை,

'மக்கட் புரோகிதன் மனைக்கற் பழித்துமழ
வன்பெற்ற வெண்குட்டநோய்
மாற்றஉல கெங்கும் திரிந்துஇத் தலத்துவர
மாற்றிச்சி றப்பும்உதவிச்
செக்கர்ச்ச டாமகுடர் தாள்மலர்க்(கு) அன்பும்
திருந்தக் கொடுத்த தீர்த்தம்'

(- பெருந்திரு...பி.த.பா. 78)

என்று தீர்த்தச் சிறப்புடன் எடுத்து மொழிகின்றது.

இச்செய்தியை இவ்வந்தாதி,

'மாமழ வப்பெரு மன்னவன் உட்கொள் மருந்து'

-பா. 72.3.

என்று குறிப்பாகக் கூறுகிறது.

**5.6. அருணகிரிநாதர்**

இங்குள்ள இறைவியையும் இறைவனையும் வணங்கிய அருணகிரியார் இங்கு எழுந்தருளியுள்ள முருகப் பெருமானை இருபாக்கள் பாடிப் பரவியுள்ளார். அவை 'காரணியும் குடிலை' என்றும் 'நிரைத்த நித்தில' என்றும் தொடங்குவன. இவை இரண்டும் சமாஜப் பதிப்பில் பா492, 891 ஆகப் பதிவாகியுள்ளன. இவ்விரண்டிலுமே இத்தலத்தைத் 'தவத்துறை' என்றே அருணகிரியார் குறிப்பிடுவதால் இலால்குடி என்ற பெயர் இவர்காலத்துக்குப் பிற்பட்டது என்க.

**5.7.**

இத்திருக்கோயிலில் கல்வெட்டுகள் பல உள. இவற்றுள் ஒன்று மாமன்னன் இராசராசன் காலத்துக்கு முற்பட்டவனான வைரமேகப் பல்லவன் காலத்துக் கல்வெட்டில் இத்திருக்கோயிலில் தேவாரப்பதிகம் பாடிய ஓதுவார் பட்டியல் தரப்பெற்றுள்ளது என்பதால் இராசராசன் காலத்துக்கு முன்னரே திருக்கோயிலில் தேவாரம் ஓதும் மரபும் ஓதுகின்றவர் பெயர்களைக் கல்வெட்டில் குறிப்பிடும் மரபும் இருந்தது என்பது ஆய்வறிஞர் முடிவு.

இங்ஙனம் பல்வகைச் சிறப்புடன் திகழ்வது இத்திருக்கோயில்.



## நூல் ஆராய்ச்சி

வரையறுத்தற்கியலாத காலப் பழைமையுடைய - அநாதியான அருட்சத்தியாகிய திருத்தவத்துறை அருள்தரு பெருந்திருப்பிராட்டி அன்னையை வரையறுத்தற்கியலாத காலப்பழைமையுடைய நம் நற்றமிழ் மொழியில் அந்தாதி பாடிப் போற்றுகிறார் அன்னையின் அருள்பெற்ற அருட்கவிஞர் அழகர்சாமிபிள்ளை. இந்நூல் சிறப்புப்பாயிரம்1, காப்பு 1, நூல் 100, நூற்பயன் 2 ஆக 104 கட்டளைக் கலித்துறைகளையுடையது.

**தமிழ்ச்சொல் இவள் :**

அப்பனை அம்மையைப் போற்றுவோர் ஒவ்வொருவரும் தத்தம் மொழிக்குரியவராகவே போற்றி மகிழ்வர். இந்நூலாசிரியரும் இதற்கு விலக்கல்லர். இவ்வம்மையை இவர்,

'தேனூறு தண்டமிழ்ச் சொற்களாய்த் தித்திக்குமே' (100) என்று போற்றுகிறார். 'சிறப்புடைப் பொருளைப் பிற்படக் கிளத்தல்' என்ற மரபுபற்றி இச்செய்தியை இவர் இந்நூலின் இறுதிச் செய்யுளான 100இல் அமைத்துள்ளார்.

**தமிழ்ப்பித்துண்டவள் இவள் :**

தண்டமிழ்ச் சொற்களாய் இவள் தித்திப்பது தமிழ்மீது இவள்கொண்ட பெருவிருப்பின் உச்சநிலை எனலாம். ஏனெனில் தண்டமிழ் அமுதம்கூட்டுண எழுந்த வேட்கையால் சௌந்தரபாண்டியனாக அப்பன், உக்கிரகுமாரபாண்டியனாகப் பிள்ளை முருகன், தான் என்று மூவரும் மதுரைக்கு வந்ததை ஸ்ரீ குமரகுருபர அடிகள் சுவைத்துக் கூறுவார். தமிழ்மீது அம்மை கொண்ட ஆராக் காதலை இந்நூலாசிரியர் இன்னும் ஒருபடி மேலே சென்று,

'*தண்டமிழ்த் தீஞ்சுவைப் பித்துண்டவள்*' - (10)

என்கிறார்.

'பித்தன்'மனைவியும் பித்துண்டவள் தானே. அப்பன் நாளும் இன்னிசையால் தமிழ் கேட்கப் படிக்காசு வழங்கிக் கேட்டவன். அவன் வழிதானே இவளுக்கும்.

**ஏழிசையானவள் :**

அப்பனை 'ஏழிசையாய் இசைப்பயனாய்' விளங்குகின்றான் என்பார் சுந்தரர். இந்நூலாசிரியர் அம்மையை



'இன்பத் தமிழாய்த் தமிழ்ச் சுவையாய் ஏழில் பொலிசையாய்
துன்பம் தவிர்க்கும் குழல்ஒலியாய் நின்ற தோகை நல்லாள்' (19)

என்று விரிவாகப் போற்றுகிறார்.

**சித்தாந்தவல்லி இவள் :**

சித்தாந்தம் என்ற சொல் 'முடிந்த முடிபு' என்ற பொருள் தருவது. இதற்கு மேல் ஒருமுடிவு இல்லை என்ற இச்சொல்லால் நம் அன்னை 'சித்தாந்தவல்லி' என்று குறிக்கப்பெறுகிறாள். எனவே இவளுக்கு மேல் ஒரு பெண் தெய்வம் இல்லை என்ற பொருள்தந்து இவளது மீஉயர் நிலையை - பராபரி என்ற நிலையைப் புலப்படுத்துகிறார்.

'தேடும் தமிழினைச் சித்தாந்த வல்லியை' (99)

என்பது காண்க.

**வெள்ளை அன்னம் இவள் :**

இவ்வம்மையைத் திருமகளாகவும் பிறராகவும் கூறும் இவ்வாசிரியர் கலைமகளாக - வெள்ளை அன்னம் என்று சுட்டுவதுடன் பண்டைத் தமிழ்ச்சங்க நிகழ்வில் தமிழுக்கு உயர்வளித்த இவளது அருட்பாங்கினையும் புலப்படுத்துகிறார். அது வருமாறு :

பண்டைத்தமிழ்ச் சங்கத்தாரிடை வந்த குயக்கொண்டான் என்பவன், சங்கத்தாரிடம் 'ஆரியம் நன்று தமிழ்தீது' என விவாதித்து அதனால் இறந்துபோக, அவன்மீது கொண்ட கருணையால், எழுப்பப் பெற்றான் என்பது வரலாறு. இதனை

'*முரணில் பொதியில் முதற்புத்தேள் வாழி*
*பரண கபிலரும் வாழி - அரணிலா*
*ஆனந்த வேட்கையான் வேட்கோக் குயக்கொண்டான்*
*ஆனந்தம் சேர்க்கசுவா கா*'

என்ற வெண்பா அவன் இறந்துபட்டதையும்,

'*ஆரியம் நன்று தமிழ் தீதுஎனவுரைத்த*
*காரியத்தால் காலக்கோட் பட்டானைச் - சீரிய*
*அந்தண் பொதியில் அகத்தியனார் ஆணையினால்*
*செந்தமிழே தீர்க்கசுவா கா*'

என்ற வெண்பா அவன் எழுப்பப்பெற்றதையும் உணர்த்துவது என்றும், குயக்கொண்டான் என்ற பெயர் மூலம் அவன் அந்நாளைய ஆரியரால் தமிழ்ச்சங்கத்தார்க்கு எதிராகத் தூண்டிவிடப்பட்டவன் என்பதும் புலனாகிறது. -(பாவாணர் மொழி நூல் பக்கம் 66, 69).

இச்செய்தியை இந்நூலாசிரியர் 'தமிழ், சாத்த நான்மறைதான் முதல் என்று சொன்னதும் சங்கத்துமுன் வாதித்துக் கொண்டான் உயிர் கொண்டு பின்அங்கு வாழ்வித்து உயர், ஆதித்தன்போல் எழுந்து ஆண்டதும் அவ்வெள்ளை அன்ன மன்றே' - (பா.88)

(கொண்டான் - குயக்கொண்டான் என்ற பெயரின் முதற்குறை - செய்யுள் விகாரம்).

என்று சுருக்கமாகக் கூறித் தமிழின் காவல் இவ்வன்னை என்பதைப் புலப்படுத்துகிறார்.

**துறை ஒன்று தண்டமிழ்த் தீஞ்சுவை இவள் :**

நம் தமிழர்தம் பண்பாடு நாகரிகம் முதலியனவற்றைக் காட்டுவன திணை துறை வகுக்கப்பெற்ற நம் இலக்கியங்கள். பிற மொழிகளில் தனித்தனிப் பாடல்களே உண்டு. தமிழில் இவை, தம்முள் ஒன்றுக்கொன்று தொடர்புடைய வரிசையில் அமைந்தவை. இவ்வகையிலான நம் இலக்கியத் துறைகளில் ஒன்றிய சுவையாக இவ்வன்னையைக் காட்டுகிறார்.

'துறை ஒன்று தண்டமிழ்த் தீஞ்சுவையாய்' (10)

என்று போற்றப்பெறுகின்றவள் இவ்வம்மை என்கிறார்.

**தமிழ் சாதித்த நான்மறை :**

'போற்று தமிழ் சாதித்த நான்மறை' என்பது ஆசிரியர் வாக்கு.

இங்குத் 'தமிழ்' என்பது 'இனிமை' என்ற பொருள் தருவது. அனைவரும் போற்றும் இனிமையை நிறைவேற்றிய நான்கு மறைகள் - நால்வர் திருமுறைகள் - என்பது இதன்பொருள். நான்மறை என்பதற்கு இருக்குயசுர் சாமம் அதர்வணம் என்று இங்குப் பொருள் கூறுவது பிழை. ஏன்? வடமொழி மறைகள் மாரணமந்திரங்களையும் அபிசார வேள்விகளையும் கூறுவன (மாரணம் = இறப்பு, அபிசாரம் = கொல்லுதல்) பிறரைக் கொல்லும், சாகடிக்கும் செயல்களல்லாமல் பிறரை வாழ்வித்தலையே தம் மரபாக - நடைமுறையாகக் கொண்டவை நால்வர் அருளிய திருமறைகள். எனவே அனைவரும் போற்றும் இனிமை சாதித்த நால்வர் திருமறைகள் என்பதே இங்குப் பொருந்தும்.

**ஞானக்குரவர்களின் சேமிப்பு :**

நாடெங்கும் வலம் வந்து தெள்ளுதமிழ்த் திருமுறைகளால் பாடிப் பக்திநெறிவளர்த்தவர்கள் நம் சமயகுரவர்கள். சந்தானகுரவர்களாகிய மெய்கண்டசிவம், அருள்நந்தி சிவம், மறைஞான சிவம், உமாபதி சிவம்



ஆகியோர் தாம்தாம் இருந்த இடத்தில் இருந்துகொண்டு ஞான நூல்கள் அருளிவாழ்வித்தவர்கள். இவ்விருவகையிலும் நம் பொருட்டுச் சேமித்து வைத்த பெருஞ்செல்வம் திருவருட் செல்வமே ஆதலின்

'தமிழ்விரித்த
மெய்வந்த ஞானக் குரவர்கள் சேர்த்துச் சேமித்துவைத்த
தெய்வம் தவத்துறை தேவி' -(83)

என்பதன் மூலம் இவர்களின் சேமிப்புப் பயன் இவளே என்கிறார்.

**பன்னிரு சூத்திர வண்ணம் :**

சந்தான குரவர்களுள் காலத்தால் மூத்தவரும் முதன்முதல் 'முப்பொருள்' பற்றித் திட்பம் நுட்பம் பொருந்தச் சிவஞானபோதம் அருளியவரும் மெய்கண்டார் ஆவார். இந்நூல் சின்னஞ்சிறு சொற்களால் பென்னம்பெரிய கருத்துக்களை உரியவாறு உணர்த்துவது. அணுவைத் துளைத்து ஏழ்கடலைப் புகட்டியதுபோன்ற கருத்து வளமுடையது; பன்னிரு சூத்திரங்களே கொண்டது. இது மொழிபெயர்ப்பன்று; தமிழில் ஆன முதல் நூலே என்பது அறிஞர் முடிபு. இதனை இவர்,

....'யோகியர் தானவர் வானவர் மற்றையர்க்கும்
சுறப்பிக்கும் பன்னிரு சூத்திர வண்ணமாய்த் தோன்றிநிற்கும்
நிறப்பிக்கும் தண்டமிழ், ஐந்திணையாய்ப் பண்டு நின்றவளே'
(81)

என்று இவ்வன்னையைப் போற்றுகிறார்.

**அன்னையைப் பிறவாறு போற்றுதல் :**

எரிபுரைமேனியள் (41), முக்கண்ணி (22), ஓங்காரி (24), ரீங்காரி (24), முத்தேவியரும் இவளே (56) குண்டலித்த மூலாதாரச்சுடர் (78), சிவனுடன் ஒக்கக் கூத்தாடியவள் (90), சிவனை அம்பலத்தில் கூத்தாடச் செய்தவள் (7), மகிடனைச் சாய்த்தவள் (20), முருகனுக்கு வேல் தந்தவள் (40), அன்பர் நெஞ்சில் சிவனது இடப்பாகத்தில் மாலின் மார்பில் நான்முகன் நாவில், கற்புடைப் பெண்டிர்கைகளில் (வளையல்),கழுத்தில் (தாலி), முகத்தில் (மஞ்சள் பூச்சு) தான் ஆக விளங்குகின்றவள் (62) கூற்றுவனை அடியவரிடம் நெருங்கவிடாள் இவள். (26, 53, 57, 71) என்றும் கூறி நம்மை அவள் திருவடித் தாமரையைச் சூடிக்கொள்ளுமாறு ஆற்றுப்படுத்துகிறார். (29).

**பொது :**

**அறம் :** நல்லறமே துணையாவது. நல்லறமே தவமாவது (36) நாம் செய்யும் நல்லறமே அன்னையின் திருவடிக்கீழ் நம்மை வாழ வைப்பது

(39) யாசிப்பவர்குரல் நம்மைச் சோதிக்க வந்த இவ்வன்னையின் குரல் (41) என்கிறார்.

**அன்பு :**

அன்பாலேதான் அகிலம் இயங்குகிறது. அன்பே அரன்உரு. நம் அன்னையின் உரு அருள் (42) அன்புள்ளமே அன்னையின் புக்கில் (48)

**ஏற்பது இகழ்ச்சியா :**

ஈயாதாரிடம் ஏற்பதே இகழ்ச்சி. நம் நல்ல வேண்டுதல்களை ஏற்று அவற்றை நிறைவேற்றித்தரும் கடன் அறிந்த இவ்வன்னையிடம் ஏற்பது இகழ்ச்சியாகாது. (14)

**சமயம் தாவாதே :**

சமயங்கள் தம்முள் ஒத்த குறிக்கோளுடையன. ஆயினும் சில நடைமுறைத் தவறுகளைத் திருத்த வேண்டுமே தவிரச் சமயம் தாவுதல் என்ற எண்ணம் பாழ்பட வேண்டும். (16)

**திருஞான சம்பந்தரும் திருநாவுக்கரசரும் :**

திருஞானசம்பந்தரை 67, 81 செய்யுள்களிலும் திருநாவுக்கரசரை செய்யுள் 74இலும் போற்றுகிறார்.

**மார்க்கண்டேயர் :** இவர் பொருட்டுக் காலனைக் கடிந்தவள் (71)

**மழவ மன்னன் :**

வெண்குட்டம் தீர்த்துப் பாவம் போக்கி வரம் அருளியது (72)

**ஸ்ரீ குமரகுருபர அடிகள் :**

மீனாட்சியம்மை இவருக்கு முத்துமாலை சூட்டியது. (74) என்பவற்றுடன்

**மீனாட்சியம்மை நாடாண்டது :**

இவ்வம்மை பாண்டியநாட்டை மீனாட்சியம்மையாக ஆண்ட செய்தியை 74, 75 செய்யுட்களில் குறிப்பிடுகின்றார்.

**அப்பினுள் உப்பு :**

இவ்வுவமை மாதவச் சிவஞான முனிவரால் சிவஞான சித்தியார் குருவணக்கத்தில் தம் உள்ளத்தில் ஆதீன ஆதி குருமூர்த்திகளாகிய நமச்சிவாய தேசிகர் இரண்டறக் கலந்துள்ளதை விளக்க எடுத்தாளப்பெறுவது.

இங்கு இவ்வாசிரியர் அம்மை தனது உள்ளத்தில் இரண்டறக் கலந்துள்ள நிலையை இவ்வுவமை மூலம் விளக்குகிறார்.



**உயிர்கள் அனைத்தும் பெண்பிள்ளைகளே :**

அனைத்துயிர்களும் ஆண்டவனைச் சென்றடைய வேண்டியன என்பதால் சைவ சித்தாந்தம் உயிர்களைப் பெண்ணாகக் கூறும். இதனையொட்டி உயிர்க்குலம் ஈன்றவள் இவ்வன்னை என்பதை இவர்,

'பெண்பிள்ளை யாவையும் பெற்றவள்' (76)

என்கிறார்.

**ஊழ்வினையும் யானும் எனதும் ஒழிந்தன :**

அம்மையின் அருளால்,

'ஆனந்த வெள்ளத்து அழுந்தின, ஆணவம்தான் போகின்ற போதில் புலன்ஒன்றி நான் இன்றிப் போதுமுற்றச் சாகின்றது; ஊழ்வினை தன்மையும் முன்னிலைச் சாட்சியமே ஆகின்றது. ஒன்று என வேறு என்ன? யான் சொல்ல ஆகின்றதே'. என்று, தான் பெற்ற நலன்களை எல்லாம் அடுக்குகிறார். (98)

**ஒன்றாய் வேறாய் உடனாய் :**

இவ்வன்னை உயிர்க்குலத்துடன் ஒன்றாய் வேறாய் உடனாய் நின்று வாழ்விக்கின்றாள். இறைவனின் இந்நிலையை 'அரக்கொடு சேர்ந்த கல்' என்று ஞானநூல்கள் விளக்கும்.

இந்நிலைகளை இவ்வாசிரியர்,

*ஒன்றாகி வேறும் உடனாகி நிற்கின்ற உன்மத்தையை* - (91)

என்று கூறுவதுடன், அப்பனைச் சுந்தரர் பித்தா என்றதுபோல் இவரும் இவ்வன்னையை இங்கு 'உன்மத்தை' என்கிறார்.

இங்ஙனம் அருள்கனிந்த இவ்வாசிரியர் வாக்கில் பல்வேறு உயர் கருத்துக்கள் மணப்பதை இதில் நுகர்ந்து இன்புறலாம்.

• திருச்சிற்றம்பலம் •

## சிறப்புப் பாயிரம்

பண்ணாய்வான்பசு என்று அனைவரும் போற்றிய குடந்தை ப. சுந்தரேசனார் வழங்கியது.

பொன்னி வளம்கொழிக்கும் பொற்பார் தவத்துறையில்
கன்னித் தமிழ்வளரக் காணுபெரு - நன்னிதியோர்
இன்று பெருந்திருவின் ஏற்புடைஅந் தாதிதனை
ஒன்றிப் பதிப்பித்தார் ஓர்ந்து

இந்நூலின் முதற்பதிப்பாளர்
திரு. மு. சின்ராசு திருத்தவத்துறை.
நூல்பதிப்பு 06-09-1968
கீலக ஆண்டு ஆவணி மாதம் 22ஆம் நாள் வெள்ளி



## திருத்தவத்துறை (இலால்குடி)
## அருள்தரு பெருந்திருப்பிராட்டி அந்தாதி

மூத்த பிள்ளையார் வணக்கம்

திருவார்ந்த கொன்றையும் தும்பையும் சூடும் சிவக்கொழுந்தை
உருவார்ந்த மூலத்து நால்இதழ்ப் பூவினில் ஓர்மருப்புச்
சிறப்(பு) ஆனைக் கன்(று)ஒன்றைச் சிந்திக்கின் றேன்அம்மை
சீர்மை எல்லாம்
உருவாய்த்(து) அந்தாதி ஒருநூறும் முட்டின்றி ஓங்குதற்கே

**குறிப்புரை :**

திரு = தெய்வத்தன்மை. சிவக்கொழுந்தை = சிவபெருமானுக்கு மகனான விநாயகரை. உரு = அழகு. மூலம் = மூலாதாரம்.

**பொருளுரை :**

திருத்தவத்துறையில் எழுந்தருளியுள்ள அருள்தரு பெருந்திருப் பிராட்டியின் சிறப்புகள் அனைத்தும் அழகுறப் பொருந்திய அந்தாதி நூலுக்குரிய நூறு செய்யுட்களும் எவ்வகைக் குறையுமின்றிச் சிறந்து விளங்க; தெய்வத்தன்மை வாய்ந்த கொன்றை, தும்பை ஆகிய மலர்களைச் சூடும் சிவபெருமானின் திருமகனை, அழகு பொருந்திய மூலாதாரத்தில் நால் இதழ்த் தாமரையில் ஒற்றைத் தந்தத்துடன் எழுந்தருளியுள்ள சிறப்புடைய விநாயகப்பெருமானைச் சிந்திக்கின்றேன்.

**விளக்கம் :**

மூலாதாரம் : யோகியர் கூறும் ஆறு ஆதாரங்களுக்கும் அடிப்படையானதாய், நம் உந்திக்குக் கீழே 12 அங்குலம் தொலைவில் நாலிதழ்த் தாமரை வடிவினது. இதன் அதிதேவதை விநாயகர்,

ஓர் மருப்பு : வியாசர் மாபாரதம் கூற அதைத் தன்ஒற்றைக் கொம்பை ஒடித்து மேருமலையில் விநாயகர் எழுதினார் என்றும், கஜமுகா சூரனைத் தன் ஒற்றைக் கொம்பை ஒடித்து அதை ஆயுதமாக ஏவிக் கொன்றதால் விநாயகர் ஒன்றைக் கொம்பர் ஆயினார் என்றும் இருவேறு புராணச் செய்திகள் உள.

நூல்

1. உதிக்கின்ற ஞாயி(று) ஒருகோடி என்றே ஒளிவிரித்துத்
துதிக்கின்ற நல்லடி யார்உளத் தாமரை தோன்றிநிற்கும்
மதிக்கும் தவத்துறை மாணிக்க வல்லி மறைக்கொழுந்து
விதிக்(கு)ஓர் மருந்து பெருந்திரு வாட்டி விழுத்துணையே

**குறிப்புரை :** பெருந்திருவாட்டி = அருள்தரு பெருந்திருப்பிராட்டி - ஸ்ரீமதி.

**பொழிப்புரை :** தன்னைத் துதிக்கின்ற அடியார்களின் மனமாகிய தாமரையில் தோன்றி நிலைத்து, ஒருகோடி எழுஞாயிறாக ஒளிபரப்பி உலகவர் மதிக்கும் திருத்தவத்துறையில் மாணிக்கக் கொடியாக, மறைகளின் கொழுந்தாக, நம் தலைவிதியை மாற்றும் ஒப்பற்ற மருந்தாக எழுந்தருளியுள்ள அருள்தரு பெருந்திருப் பிராட்டியாகிய எம்மேலான துணையே! உன்னை வணங்குகிறேன்.

**விளக்கம்:** கீழ்த்திசையில் காலையில் எழுஞாயிறு ஒளிதந்து வாழ்விக்குமே தவிர மிகுவெப்பத்தால் சுடாது. அம்மை தன் தண்ணருளால் வாழ்விப்பவளே தவிர யாரையும் வருத்தாள் என்பதால் அம்மையை 'உதிக்கின்ற ஞாயிறு' என்றார்.

அம்மை பசிய நிறத்தள் என்பதே பெரிய வழக்கு; மரகதவல்லி என்பர். ஸ்ரீ குமரகுருபரர் மீனாட்சியம்மையை 'ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்கவல்லி' என்பதையொட்டி இவரும் அம்மையை மாணிக்கவல்லி என்கிறார்.

விதிக்கு ஓர் மருந்து: 'அவத்துறை மாற்று தவத்துறை நாயகி' (பெருந்திருப்பிராட்டி பிள்ளைத்தமிழ்-6) செங்கீரை. அவத்துறை = தீயூழ்-விதி.

2. துணையாகி எவ்வுயி ரும்காத்து நிற்பவள் சூழ்கருவில்
அணையாதே ஆனந்த வாழ்(வு)அளிப் பாள்என்னை ஆட்கொண்டவள்
இணையாரும் அற்றவள் ஏகாந்த வல்லி எழில்மலர்ப்பூங்
கணையோடு செங்கரும்(பு) ஏந்திய பூங்கொடிக் கன்னிகையே.

**குறிப்புரை :** சூழ்கரு=முதிர்ந்துவரும் கரு. அணையாமல்=அழியாமல். ஏகாந்தம்=தகுதி.

**பொழிப்புரை:** எவ்வகைப்பட்ட உயிர்கட்கும் துணையாய் இருந்து காத்துநிற்பவள்; முதிர்ந்து வரும் கருவில் தான் தங்கியிருந்து அது



அழியாமல் முதிரும் வாழ்வினை அளிப்பவள்; என்னைத்தன் அடிமையாகக் கொண்டவள்; ஒத்தாரும் மிக்காரும் இல்லாதவள்; தகுதியனைத்தும் ஒருசேர வாய்த்தவள்; அழகிய மலர் அம்புகளுடன் கரும்புவில்லும் ஏந்திய பூங்கொடிக்கன்னி இவள்.

**விளக்கம்:** 'எழில்மலர்...பூங்கொடி'; 'பனிமலர்ப்பூங்கணையும் கருப்புவில்லும் மென்பாசாங்குசமும் கையில் அணையும் திரிபுர சுந்தரி' (அபிராமி அந்தாதி 2:2-4) கன்னிகை: 'உலகு உயிர் எல்லாம் ஈன்றும் பவன்பிரமசாரி ஆகும் பால்மொழி கன்னி ஆகும்' (சித்தி 166:2-3). 'முன்பு உலகு ஈன்ற முகிழ்முலைக்கன்னி'(சிதம்பரச் செய்யுள்..31).

3. கன்னிகை பொன்னி கமலா சனத்தி கனங்குழையாள்
மின்ஆ யிரம்என்ன வேஒளி காட்டிமெய் காட்டியுள்ளே
என்ஆவிக்(கு) உள்ஒளி யாய்இருக் கின்றவள் ஏதுசொல்வேன்
பன்னாகப் பூண்அணி பார்வதி வேதப் பரிபுரையே.

**குறிப்புரை :** கன்னிகை=அழிவில்லாதவள்-பராசக்தி. பொன்னி = திருமகள். கமலாசனத்தி=வெண்டாமரையில் எழுந்தருளியுள்ள கலைமகள். குழை=காதணி. மெய்காட்டி=உயிர்கட்கு உடம்பை அருளி-பிறப்பித்து. உள்ஒளி=ஞானம். வேதப்பரிபுரை= வேதத்தைச் சிலம்பாக அணிந்தவள். பல்+நாகம்=பன்னாகம்.

**பொழிப்புரை:** பற்பல நாகங்களாகிய அணிகலன் அணிந்த பார்வதியாகிய இவள், வேதத்தைத் தன் கால்சிலம்பாகத் திருவடியில் அணிந்தவள்; என்றென்றும் அழியாத கன்னியாக - பராசக்தியாக, திருமகளாக, வெண்டாமரையில் எழுந்தருளியுள்ள கலைமகளாக உள்ளவள்; கனத்த காதணி அணிந்தவள். ஆயிரம் மின்னல்போல் ஒளிகாட்டி உயிர்களைப் பிறப்பித்து அவற்றுக்கு ஞானமாக விளங்கும்அவளைப்பற்றி எப்படிக் கூறுவேன்.

**விளக்கம்:** இவள் ஞானவடிவினள்-'சத்திதன் வடிவு ஏது என்னில் தடையிலா ஞானம் ஆகும்'-(சித்தி சுபக் 81). மின் ஆயிரம் என்னவே ஒளிகாட்டி - 'மின் ஆயிரம் ஒரு மெய் வடிவாகி விளங்குகின்ற தன்னாள்'. -(அபிராமி அந்-55:1-2) வேதப் பரிபுரை - 'வேதப் பரிபுரையே' - (அபிராமி அந் 42:4)

4. பரிபுரச் சீரடிப் பாசாங் குசத்தி பருப்பதத்தி
திரிபுர சுந்தரி சிற்றடிக் கோமளச் செல்விதன்னை
எரிபுரை செம்மலர் கொண்டுபன் னாளும்
இறைஞ்சிநிற்பார்க்(கு)
எரிபுரை மேனிகொண்(டு) அங்குநிற் பாள்அவர் ஏத்திடவே.

**குறிப்புரை:** பருப்பதத்தி = மலைமகள். கோமளம் = அழகு. எரிபுரைமேனி = செம்மேனி.

**பொழிப்புரை:** சிலம்பணிந்த அழகிய திருவடியுடையவள்; பாசம் அங்குசம் ஏந்திவள்; மலைமகள்; மூவண்டங்களிலும் அழகுச் செல்வியாகிய அருள்தரு பெருந்திருப் பிராட்டியைத் தீப்போலும் செந்நிறம் கொண்ட மலர்களைத் தூவிப் பன்னாட்கள் தொடர்ந்து வழிபடுவார்க்கு அவள், அவர்கள் ஏத்தத் தீப்போலும் செம்மேனி தாங்கி அவர்கள் எதிர் நின்று அருள் புரிவாள்.

5. ஏத்தித் துதிப்போர் இடர்கெடுப் பாள்வினை ஏ(து)அவர்க்கு
மாத்திப் பிறக்கும் வகையறி வார்இந்த மாநிலத்தில்
தோத்திரம் செய்பவர் பின்சென்று வேண்டும் துணைசெய்குவாள்
ஆத்தி பிறைக்கண்ணி செஞ்சடை கொண்டஎம் ஆரணங்கே.

**குறிப்புரை :** ஏத்தித் துதிப்போர் = வணங்கிப் போற்றுவோர். மாத்திப் பிறக்கும் = மனிதராகப் பிறந்தவர் தேவராகப் பிறக்கும். பிறைக்கண்ணி = மூன்றாம்பிறை ஆகிய தலைமாலை.

**பொழிப்புரை:** ஆத்தி மாலையுடன் மூன்றாம்பிறை நிலவாகிய தலைமாலையும் அணிந்த செஞ்சடையுடைய எம் தெய்வமாகிய அம்மை, தன்னை வணங்கிப் போற்றுவோர் துன்பங்களை எல்லாம் அழிப்பாள்; எனவே அவர்கட்குத்தீயுழ் இல்லை. ஆகவே மனிதராகப் பிறந்தவர் தேவராகப் பிறக்கும் வழிவகை அறிவார்; இவ்வுலகில் தன்னைப் போற்றுகின்றவர்களைத் தொடர்ந்து சென்று, அவர்கட்குத் துணைபுரிவாள்.

**விளக்கம் :** ஆத்திசூடி இளம்பிறையணிந்தவனது இடப்பாகம் கொண்டவளாதலின் அவை இவளுக்கும் உரியவாயின. மாத்திப்பிறக்கும் வகை - 'செய்வினை மருங்கில் எய்தல் உண்டெனின் மாறிப்பிறப்பின் இன்மையும் கூடும் - (புறம்) (மாறிப்பிறப்பின் இன்மை = உயர்திணைநிலை மாறி அஃறிணையாகாது, தேவராதல்).



'நரர்பயில் தேயம் தன்னில் நான்மறை பயிலா நாட்டில் விரவுதல் ஒழிந்து தோன்றல் மிக்க புண்ணியம்தான் ஆகும்'. (சித்தி. சுபக் 179). வீடுபேற்றினைப் பிறப்பு என்று கூறும் மரபின்மையால் ஊர்வ முதலிய எழுவகைப் பிறப்புள் மாறிப்பிறத்தல் என்பது தேவராய்ப் பிறத்தல் குறித்தது.

மாத்தி - எதுகை நோக்கிய செய்யுள் விகாரம்.

6. அணாங்கு கவாயபல் ஆயிரம் சித்தி அருங்கலைகள்
வணாங்கித் துதிக்கும் தவத்துறை வாழ்கின்ற மாமயிலை
இணாங்குசெம் பாதிஎன் பார்அந்த ஈசர்க்(கு) ஏ(து)அங்கமும்
குணாங்கெட்ட அப்பரன் சீர்பெற்ற தானிடைக் கூட்டுறவே.

**குறிப்புரை:** அணங்கு = தெய்வத்தன்மை. கவாய = பற்றிக்கொண்ட. ஏது = மூலம். அங்கம் = வடிவம் - குறி. இடை = வழியே.

**பொழிப்புரை:** தெய்வத்தன்மைகாரணமாகப் பற்றிக் கொண்ட பல்லாயிரக்கணக்கான சித்திகள், அரிய கலைகள் முதலியன வணங்கித் துதிக்கும் திருத்தவத்துறையுறை அழகிய மயிலாகிய இவ்வன்னையை அந்தச் சிவபெருமானுக்குப் பொருந்திய செம்பாதி என்பர். அவனுக்கு மூலம், குறி, குணம் இல்லையாயினும் அவை அவ்வப்பனிடம் இவளது கூட்டுறவின் வழியே சீர்பெற்றன.

**விளக்கம் :** ஏது அங்கம் குணம் கெட்ட அப்பன் - 'மூலனாம் மூர்த்தியாம் முன்னே தானாம்' (திருமு. 6. திருக்கருகாவூர் - 6).
குறியும் நெறியும் குணமும் இலார் - திருமு.7. குலாப்பத்து 4.
குறி ஒன்றும் இல்லாத கூத்தன் - (திருமு.7. அச்சோப்.2).
சீர்பெற்றதால் - ஆல் - அசைநிலை.

7. கூ(டு)எடுத்(து) என்னை உழலா வகைஇரு கோமளத்தாள்
பா(டு)என்று சொல்லிப் பரிசளித் தாள்அன்னை பாவம்என்னே
ஓ(டு)எடுத்(து) எங்கும் பலிக்(கு)உழன்று ஏங்கிய உன்மத்தனை
ஆ(டு)என்(று) அம்பலத்(து) ஏற்றிமுன் ஆட்டிய அஞ்சுகமே.

**குறிப்புரை :** கூடு = உடம்பு-பிறப்பு. இருகோமளத்தாள் = அழகிய இரண்டு திருவடியினள். பலி = பிச்சை. ஓடு = பிரமகபாலம். அஞ்சுகம் = கிளி.

**பொழிப்புரை :** இனிமேல் நீ பிறவி எடுத்துத் துன்புறாவகையில் இருக்க என் அழகிய இரு திருவடிகளைப் பாடு என்று எனக்கு

வீடுபேறாகிய பரிசிலை ஒதுக்கியளித்த இவ்வன்னை, அந்தோ பாவம்! நான்முகனது மண்டையோட்டை ஏந்தி எவ்விடத்தும் பிச்சைபெற அலைந்து துன்புற்ற பித்தனாகிய சிவபெருமானை, நீ கூத்தாடுக என்று சொல்லிப் பொன்னம்பலத்தில் ஏற்றி ஆடச்செய்த கிளியாவாள்.

**விளக்கம் :** இப்பெருமாட்டி தரும் பரிசுகளுள் மிகப்பெரிய பரிசு வீடுபேறே. இதனைப் 'பெறலரும் பரிசில்' என்பார் நக்கீரர். ஓடு எடுத்து... உன்மத்தன் - 'வள்ளல் கரத்தைக் கபாலத்தைக் காணூஉ' 2- ( சிதம்பரச்செய்...7:1-2). - முருகனைக் 'காபாலி பெற்ற குமரா' எனல் - (முத்துக்குமாரசாமி பி. 9) 'ஆடு என்று... அஞ்சுகமே' - 'மன்றிடை என்றும் நின்று ஆட ஒருவர்தமை ஆட்டுமயில்'- (பெருந்திருப்பிராட்டி பிள்ளைத். செங்கீ.2:3) அம்பலத்தாடல் என்பது ஐந்தொழில் (படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல்) நிகழ்த்தும் குறியீடு.

8. *அஞ்சுகம் கொஞ்சும் அணிமலர்ப் பூங்குழல் ஆரணத்தி*
*பஞ்சினும் மெல்லடிப் பாவை பரவும்அன் பர்உளத்தி*
*மிஞ்சும் பெருந்திரு வேணஎ லாம்தரும் மென்கமலை*
*அஞ்சினும் உட்புகுந் தாள்எனை ஆண்டருள் அம்பிகையே.*

**குறிப்புரை:** ஆரணத்தி = வேதங்கட்கு உரிமையுடையவள். வேணது = வேண்டியது. அஞ்சினும் = ஐம்பொறி வழியாகவும். உள் = உள்ளம்.

**பொழிப்புரை:** என்னை ஆட்கொண்டு அருள்புரியும் அம்மை, கிளியினைக் கொஞ்சுகின்றவள்; அழகிய மலர் சூடிய மென்மையான கூந்தலுடையவள்; வேதங்கட்கு உரிமையுடையவள்; பஞ்சினும் மெல்லிய திருவடியுடையவள்; தன்னை வணங்கும் அடியார் உள்ளத்தில் எழுந்தருளியிருக்கின்றவள்; மிகமிக மேலான பெருந்தெய்வமாவாள்; நான் வேண்டும் அனைத்தையும் அருள்கின்ற மென்மையான தாமரை மலரில் இருக்கும் திருமகள் ஆவாள்; என் ஐம்பொறிகளின் வாயிலாகவும் புகுந்து அவள் என் உள்ளத்தில் எழுந்தருளியுள்ள பார்வதியாவாள்.

**விளக்கம்:** அம்மை அஞ்சுகம் கொஞ்சுகின்றவள் 'பைங்கிளியை அங்கைகொடு பண்புரை பயிற்றும் குங்கும சவுந்தரி! (பூவாளூர்ப் புராணம் 4) அஞ்சினும் உள்புகுந்தாள்- 'வருந்தாவகை என் மனத்தாமரையினில் வந்து புகுந்து இருந்தாள்'-(அபிராமி அந்.90).



'9. *அம்பிகை சங்கரி அற்புதக் கூத்தாடும் அம்பரத்தி*
*தம்பியைத் தம்முனாச் சாற்றநின் றாள்அந்தச் சங்கரர்க்கு*
*நம்பிக்கை யான மனைத்திரு வாட்டிஎன் நாயகத்தைக்*
*கும்பகத் துள்வைத்துப் போற்றுகின் றேன்என் குறையறவே.*

**குறிப்புரை :** அம்பரத்தி = பரவெளியில் உள்ளவள். தம்+பி+ஐ தமது+அழகு+ஐ. தம்முனா = தமக்கு உயர்ந்ததாக. நாயகத்தை = தலைமையானவளை. கும்பகத்துள் = உட்கொள்ளுதலும் வெளியிடுதலுமாக உள்ள மூச்சுக்காற்றை உள்ளேயே நிறுத்தி வைக்கும் அந்நிலையில். வைத்து = எழுந்தருளச் செய்து.

**பொழிப்புரை :** அம்பிகை, சங்கரி, பரவெளியில் அற்புதக் கூத்தாடுகின்றவள்; தமது அழகினைத் தமக்கு உயர்ந்ததாகக் கொண்டு கூற நிற்கின்றவள்; சிவபெருமானுக்கு நம்பிக்கையான மனையாட்டி; எனக்குத் தலைமையான அவளை நான் என் கும்பகத்தில் எழுந்தருளச் செய்து என்குறைதீரப் போற்றுகின்றேன்.

**விளக்கம்:** சங்கரர்க்கு... மனைத்திருவாட்டி - 'எத்திறம் ஈசன் நிற்பன் அத்திறம் அவளும் நிற்கும்' (-சித்தியார்) 'நங்கையினால் நாம் அனைத்தும் செய்தாற்போல் நாடு அனைத்தும் நங்கையினால் செய்தளிக்கும் நாயகனும்' - (திருக்களிற்றுப் 78:1-2) . 'ஐயன் எத்திறம் நிற்கும் அத்திறம் மணிஒளியும் மலர்மணமும் உறழ நின்று' - (பெருந்திருப்...பிள்ளைத் 3:1). 'திங்கள்முடி மகிழ்நர் எத்திறம் நிற்பர் அத்திறம் திகழ் யாமும் நிற்பம்' - (பெருந்திருப்...பிள்ளை. 17:3).

10. *குறைஒன்றும் இல்லை மறைஒன்றும் கோதில் குளிர்மதியைப்*
*பரைஒன்று தாய்என்று பாட்டென்று கேட்டிடும் பாட்டினுக்கும்*
*நிரைஒன்றும் ஒத்தொலி யாம்என்றும் ஓம்என்றும் நின்றிலங்கும்*
*துறைஒன்று தண்டமிழ்த் தீஞ்சுவை யாய்மறை சொல்லுவதே.*

குறிப்புரை : மறைஒன்று = மறைகளில் பொருந்தியுள்ள. பரை ஒன்று தாய் = பராபரையாய் விளங்கும் தாயை: நிரை = முறை. ஒத்தொலி = பொருத்தமான ஒலி -இசை. துறை = எல்லை.

**பொழிப்புரை :** வேதத்தில் பொருந்திய குற்றமற்ற குளிர்நிலவாய் விளங்குகின்றவளை, பராபரையாய் விளங்கும் தாயை; இசைப்பாட்டு என்று நாம் கேட்கும் பாட்டில் முறைப்படி ஒத்த ஒலியை - இசையை, ஓங்காரமாக நின்று விளங்கப் பொருந்தியவள் என்று மறைகள் கூறும்

இவளைத் தண்டமிழின் தீஞ்சுவை எல்லையாய் உள்ளவள் என்று கூறுவதில் குறை ஒன்றும் இல்லை.

**விளக்கம் :** 'பண்ணின் இசையாகி நின்றாய் போற்றி - என்ற அப்பனுக்குரிய போற்றி'. இடப்பாகம் அமர்ந்த இவளுக்கும் ஏற்றதே. தண்டமிழ்த் தீஞ்சுவை ஆனவள் - 'தொடுக்கும் கடவுள் பழம்பாடல் தொடையின் பயனே' - (மீனாட்சி...பி.த.வருகை 9:1)

11. சொல்லுவ(து) என்இனிச் சொல்லற்(று) இருக்கும் சுகவெளிக்கே
    நில்என்(று) சொன்னவள் நிற்குணி அற்பன்என் நெஞ்சகத்தைக்
    கல்என்(று) இராமல் மலர்எனக் கொண்டவள் காமன்இரு
    வில்லாம் கரும்புரு வம்கயல் கூர்விழி வித்தகியே.

**குறிப்புரை :** சுகவெளி = வீடுபேறு. நிற்குணி = விருப்பு வெறுப்பற்ற குணத்தாள். வித்தகி= ஞானவடிவினள்.

**பொழிப்புரை :** மன்மதனது வில்லாக விளங்கும் இருகரிய புருவங்களையும், கெண்டை மீன்களாக விளங்கும் இரு கூரிய விழிகளையும் உடைய ஞானவடிவினள்ஆகிய இவள், இனிமேல் பேச்சுக்கு இடமின்றிப் பேரின்பம் துய்த்தற்குரிய 'வீடுபேறு பெறுமாறு நில்' என்று சொன்னவள், விருப்பு வெறுப்பற்ற குணத்தவள், அற்பனாகிய என் நெஞ்சம் கல்லேயாயினும் அதனை மலர் என்று கொண்டு அதில் எழுந்தருளியிருப்பவள்; இத்தகையவளைப் பற்றி இனிமேலும் என்ன சொல்ல உள்ளது; ஏதுமில்லை.

**விளக்கம் :** முத்திநிலையில் இறைதரும் இன்பத்தை உயிர் துய்த்தபடி இருப்பதல்லால் சொல்லுக்கு இடமில்லை - 'சுத்த அனுபோகத்தைத் துய்த்தல் அணு. இன்பம் கொடுத்தல் இறை' - (உண்மை விளக்கம் 51:2-3) கல் நெஞ்சம் - 'கற்போலும் நெஞ்சம் (திருவாசகம் திருத்தோள்-4) 'அம்மை ஞான வடிவினள்' - 'சத்திதன் வடிவுஏது என்னில் தடையிலா ஞானம் ஆகும்' - (சித்தி சுபக் 62) 'முழுஞானப் பெருக்கே வருக' - (மீனாட்சி.. பி.த. வருகை 10).

12. வித்தகி வேதாந்த வீ(டு)உறை சங்கரி வேண்டுபல
    சித்திகள் தந்தருள் சிற்றிடை வாலைநாம் சேரஒண்ணா
    முத்தியும் முத்திக்கோர் வித்தும்அவ் வித்துமு ளைக்கின்றநல்
    புத்தியும் ஆன பெருந்திரு வாட்டியைப் போற்றுவமே.

**குறிப்புரை :** வாலை = இளம்கன்னிப்பெண் (12 வயது) புத்தி = ஞானம்.



**பொழிப்புரை :** ஞானவடிவினள்; வேதத்தின் முடிந்த முடிவான உபநிடத வீட்டில் வாழ்கின்ற சங்கரி; நாம் வேண்டுகிற பல்வேறு சித்திகளைத் தந்தருள்கின்ற சிற்றிடை கொண்ட இளம் கன்னிப்பெண்; நம் போன்றவர் அடைதற்கரிய முத்தி நிலையாய், அந்த முத்திக்கு வாய்த்த ஒப்பற்ற வித்தாய், அவ்வித்து முளைத்தற்குரிய நல்ல ஞானமாக விளங்கும் அருள்தரு பெருந்திருப் பிராட்டியைப் போற்றுவோம்.

**விளக்கம் :** முத்தி, வித்து, புத்தி அவளே - 'தவம் முயல்வார் முத்தியும் முத்திக்கு வித்தும் வித்தாகி முளைத்து எழுந்த புத்தியின் உள்ளே புரக்கும் புரத்தை' - (அபி.அந்.29:2-4).

13. போற்றிடு வோம்எந்த நேரத்தி லும்புந்தி புக்கிருந்து
    மாற்றிடு வாள்உள்ள வல்வினை யாவும் மறைந்துகெடும்
    சாற்றும் புகற்(கு)ஓர் தவத்துறை மேவிய தண்ணமு(து)ஆர்
    கீற்றுப் பிறைநுத லார்மலை மாமகள் கேடில்லையே.

**குறிப்புரை :** தண் அமுது ஆர் கீற்றுப்பிறை = தண்மைமிக்க அமுதஒளி பொருந்திய பிறைத்துண்டம். புகல் = அடைக்கலம்.

**பொழிப்புரை :** அடைக்கலம் புகுமிடமாகச் சொல்லப்பெறும் திருத்தவத்துறையில் எழுந்தருளியுள்ள தண்மை மிக்க அமுதஒளி பொருந்திய பிறைத்துண்டமாக விளங்கும் நுதலுடைய மலைமகளை எந்த நேரத்திலும் போற்றுவோம். இதனால் ஒரு துன்பமும் நமக்கு இல்லை. நம் அறிவில் அவள் புகுந்து நிலை கொண்டு நம்மை மாற்றிடுவாள்; அதனால் நம் கொடிய வினைகள் அனைத்தும் மறைந்து அழியும்.

14. இல்லைஎன்(று) ஏற்ப(து) இகழ்ச்சிஎன் பீர்அஃ(து)ம் ஏதிலர்பால்
    இல்லைஎன்(று) அன்னையை வேண்டுவ கேட்கில் இழுக்குமுண்டோ
    இல்லைஎன் னாத தவத்துறை வாழ்கின்ற ஏந்திழைபால்
    இல்லைஎன் பார்சென்றே ஏற்றபின் வாட்டங்கள் ஏதவர்க்கே.

**குறிப்புரை :** ஏதிலார் = அயலார்.

**பொழிப்புரை :** தன்னிடம் இல்லாத ஒன்றை அயலாரிடம் போய் இல்லை என்று கூறித் தருமாறு கேட்பது இகழத்தக்கது என்பீர். நம் தாயாகிய இவளிடம் அவ்வாறு கேட்பதில் யாதொரு குற்றமுமில்லை.

தன்னிடம் வேண்டியவர்க்கு வேண்டியன இல்லை என்று மறுக்காது அருளும் திருத்தவத்துறையில் எழுந்தருளியுள்ள இவ்வம்மையிடம் இல்லை என்பார் சென்று யாசிப்பின், அவர்கட்கு அதனை வழங்குவாள்; அதனால் அவர்கட்கு எவ்வித வாட்டமும் இல்லையாம்.

**விளக்கம் :** ஏற்பது இகழ்ச்சி, இரவு உள்ள உள்ளம் உருகும் என்பன உண்மையேயாயினும், நம் அன்னை, கரப்பிலா நெஞ்சிற்கடனறிந்தவள். ஆதலின் கரத்தல் கனவிலும் தேற்றாத அவளிடம் இரந்தது பெறுதல் 'ஈதல் ஒத்த மகிழ்ச்சிக்குரியது' இழிவன்று என்றார்.

15. *வாட்டடங் கண்ணி அபிராம வல்லியை வாஞ்சித்(து)அவள்*
*தாட்டா மரைக்கே சரண்புகுந் தேன்இனித் தாழ்(வு)அறியேன்*
*கேட்டால் கொடுக்கும் அழைத்தால் எதிர்வரும் கீர்த்திஎல்லாம்*
*பாட்டாய் இசைக்க அருள்கூர் கலாவல்லி பால்மொழியே.*

**குறிப்புரை :** வாள் தடங்கண்ணி = ஒளி பொருந்திய அகன்ற கண்களை உடையவள். வாஞ்சித்து = விரும்பி.

**பொழிப்புரை :** ஒளி பொருந்திய அகன்ற கண்களையுடைய அபிராமவல்லியாகிய அருள்தரு பெருந்திருப்பிராட்டியின் கருணையை விரும்பி அவளது திருவடித் தாமரைக்கே அடைக்கலம் புகுந்தேன். எனவே என் வாழ்வில் இனிமேல் தாழ்வு ஏதும் அறியேன்; பால்போல் நலம்தரும் சொற்களைப் பேசுகின்றவளே, கேட்டால் கொடுக்கின்ற, அழைத்தால் எதிர்தோன்றி அருள்புரிகின்ற உன் புகழை எல்லாம் பாடல் வடிவில் பாட எனக்கு அருள்புரிவாயாக.

**விளக்கம் :** கேட்டால் கொடுக்கும் - 'வேண்டமுழுதும் தருவோய். நீ' - (திருவாச. குழைத்த.6)

பான்மொழி - உவமைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை.

16. *மொழிக்கும் நினைவுக்கும் எட்டாத மொய்குழல் மோகமற்றோர்*
*விழிக்கும் வினைக்கும் வெளிநிற்பள் நான்விளை யாட்டதுவாய்*
*களிக்கும் அவள்திரு மந்திரம் சொல்லிக் களித்(து) அறிவீர்*
*பழிக்கும் பிறசம யம்படர் மோகங்கள் பாழ்படவே.*



**குறிப்புரை :** மொய்குழல் = அடர்ந்த கூந்தலுடைய இவ்வன்னை. விழிக்கும் = பார்வைக்கும். வினைக்கும் = செயலுக்கும். வெளிநிற்பள் = வெளிப்பட்டு உதவுவாள். பிறசமயம் படர்மோகம் = பிற சமயம் சாரும் மோகம்.

**பொழிப்புரை :** நம் சொல்லுக்கும் நினைவுக்கும் எட்டாதவளாகிய அடர் கூந்தலுடைய இவ்வன்னை, பற்றற்றவர் பார்வைக்கும் செயலுக்கும் வெளிப்பட்டு உதவுவாள். நான் விளையாட்டாகச் சொல்லிமகிழும் அவளுடைய திருமந்திரத்தைச் சொல்வதால் இவளைப் பழிக்கும் பிற சமயத்தைச் சாரும் மோகம் பாழ்படுதலைக் கண்டுகளிப்பீர்.

**விளக்கம் :** சக்திக்குரிய திருமந்திரம் 'ஹரீம்' - (திருமந்திரம் 1.63) 'பிறசமயம்... பாழ்படல்' - வீணே பலிகவர் தெய்வங்கள்பால் சென்று மிக்க அன்பு பூணேன். (அபிரா - அந்.64) 'பரசமயம் விரும்பேன்' (அபி.அந்.23). 'வினைக்கும் வெளி நிற்பவள்' - 'உழைக்கும் போது உன்னை அன்னையே என்பன்'. (அபி.அந்.33)

விழி - இடவாகுபெயர்

17. *படவேண்டும் நெஞ்சம் ஒருநிலை என்னில் பயின்றவினை*
*கெடவேண்டும் என்னில்அவ் வைம்புலக் கேடுகள் கேட்டைவிட்டே*
*அடலேறு போல்நிற்கும் ஆண்மையும் வேண்டில் அறி(வு) ஒளியாய்*
*நடமாடு வா லைஎன் நாதாந்த வல்லியை நண்ணுவிரே.*

**குறிப்புரை :** கேட்டை = துன்பத்தை. அறிவுஒளி = ஞானஒளி. நாதாந்தம் = நாதமுடிவில் உள்ள.

**பொழிப்புரை:** நம் நெஞ்சம் நடுநிலைப்பட வேண்டும் என்றால், மிக்க வினைகள், மற்றும் ஐம்புலத் துன்பங்கள் கெடவேண்டும் என்றால், அக்கேட்டினை விட்டு முற்றாக விலகி ஆற்றல் மிக்க ஆண்சிங்கம்போல் நிலைகுலையாது நிற்கும் ஆண்மை வேண்டும் என்றால், ஞானப் பேரொளியாக இயங்கும் என் இளங்கன்னியை, நாதமுடிவில் உள்ளவளைச் சென்று பொருந்துங்கள் - சரணடையுங்கள்.

**விளக்கம்:** அம்மை அறிவுஒளி - 'மெய்ஞ்ஞான விளக்கேவருக' - (ஆனைக்கா அகிலாண்...பி.த.வருகை). 'பரஞானஒளியே வருக'- அழகாபுரி உமையம்மை. பி.த.வருகை)

18. நண்புக்(கு) எளியவள் நாரணன் தங்கைஅந் நான்மறைச்சி
எண்ணும் புவனங்கள் யாவையும் பெற்றவள் ஏத்துமவர்
கண்ணும் மனமும்தன் காலடிக் கீழ்நிற்கக் கட்டுரைத்தே
எண்ணற்(கு) அரியதோர் வீடளிப் பாள்எய்தும் இன்பமதே.

**விளக்கம்:** கட்டுரைத்து = உறுதிபடக்கூறி.

**பொழிப்புரை:** நட்புக்கொள்ள எளியவள்; திருமால் தங்கை; நான்கு மறைகட்கும் உரிமையுடையவள்; நினைக்கின்ற உலகங்கள் அனைத்தையும் பெற்றெடுத்தவள்; தன்னை வணங்கும் அடியார்களின் கண்களும் மனமும் தன்திருவடியிலேயே பதிந்து நிற்குமாறு உறுதிபடக்கூறி, நாம் அங்கு நிற்கும் நிலையில் யாரும் நினைத்தற்கும் அரிய வீடுபேற்றை நமக்கு அளிப்பாள். அதனால் வற்றாமுற்றாப் பேரின்பம் நமக்கு வாய்க்கும் .

**விளக்கம்:** மாலின் தங்கை, 'செங்கண்மால் திருத்தங்கச்சியே' - (அபி.அந்.61) 'முகுந்தற்கு இளையவளே' - (அபி.அந்.13). 'புவனங்கள் யாவும் பெற்றவள்' - 'உவந்து இருவரும் புணர்ந்து இங்கு உலகு உயிர் எல்லாம் ஈன்றும்' - (சித்தி. சுபக்.77). 'பூத்தவளே புவனம் பதினான்கையும்' - (அபி.அந். 13.) 'முன்பு உலகு ஈன்ற முகிழ் முலைக்கன்னி' - (சிதம்பரச். 31:1.)

19. இன்பத் தமிழாய்த் தமிழ்ச்சுவையாய் ஏழில் பொலிசையாய்
துன்பம் தவிர்க்கும் குழல்ஒலி யாய்நின்ற தோகைநல்லாள்
வன்மனம் அற்றவள் வான்முதல் பூதங்கள் மற்றும் எல்லாம்
தன்உரு வாம்என்று காட்டுகின் றாள்என் இயம்புவனே.

**குறிப்புரை :** வன்மனம் = கல்நெஞ்சம். தன்உரு = தனது ஆற்றல் வடிவு.

**பொழிப்புரை :** இன்பம் தரும் தமிழாக, தமிழின் சுவையாக, ஏழாகப் பொலியும் இசையாக, துன்பத்தைத் தவிர்க்கும் புல்லாங்குழல் இசையாக நிற்கின்ற மயிலாகிய இவள், கல்நெஞ்சம் இல்லாதவள், வான் முதலிய ஐம்பூதங்கள், மற்றும் அனைத்திலும் ஆற்றல் வடிவாய் விளங்குகின்றவள்; இவளைப் பற்றி வேறு என்ன கூறுவேன்!

**விளக்கம் :** இவள் தமிழின் சுவை : 'நறைபழுத்த துறைத் தீந்தமிழின் ஒழுகுநறுஞ்சுவையே'(மீனாட்சி.பி.த.வருகை9) வான், வளி, தீ, நீர், நிலம் ஆகிய ஐம்பூதங்கள் மற்றும் அனைத்திலும் இவள் அவற்றின் ஆற்றலின் வடிவம். அப்பொருள்கள் அப்பன், அம்மை அவற்றிலுறை ஆற்றல். ஆற்றல் இல்லாத பொருளோ பொருளைத் தழுவியமையாத ஆற்றலோ இல்லை என்பதும், வானமே பிற பூதங்களின் தோற்றத்துக்குக் காரணம் என்பதும் அறிவியல்.

ஏழிசை - தொகைக் குறிப்பு. பொலிஇசையாய் என்று வரவேண்டியது பொலிசையாய் என்று வந்தது செய்யுள் விகாரம்.

20. இயம்பிடில் காண்பன யாவையும் தான்எச் சமயத்திலும்
நயம்பெறப் போற்றப் படுபவள் நாரணி நஞ்(சு) அருத்திப்
பயம்கெடத் தேவர்க்குத் தான்அமு(து) ஊட்டிப்பகைத்(து) எழுந்த
சயம் கெட மகிடனைச் சாய்த்துநின்(று) ஆடிய தற்பரையே.

**குறிப்புரை :** நாரணி = திருமாலாக உள்ளவள். மகிடன் = மகிடாசுரன் - எருமைத் தலை அரக்கன். சாய்த்து = கொன்று. தற்பரை = தனக்குத்தானேயான தலைவி - தனக்கு வேறு தலைவர் யாரும் இல்லாதவள்.

**பொழிப்புரை :** நாராயணி, நஞ்சினைச் சிவபிரான் உண்ணச் செய்து அமுதினைத் தேவர்க்கு ஊட்டியவள்; அச்சமின்றிப் பகைத்து எழுந்த வெற்றி பொருந்திய மகிடாசுரனைக் கொன்று அவன் தலைமேல் ஆடியவள்; தனக்கு வேறு தலைவியில்லாதவள்; சொல்லுங்கால் காணும் பொருள்கள் அனைத்தும் எச்சமயத்திலும் தானேயாக விளங்குகின்றவள் என்று நயமாகப் போற்றப் பெறுகின்றவள் ஆவாள்.

**விளக்கம் :** நாராயணி - 'சங்கமும் சக்கரமும் தாமரைக்கை ஏந்திச், செங்கண் அரிமால் சினவிடை மேல் நின்றாயால்' (சிலம்பு - வேட்டுவரி). 'போராழி சங்கு அங்கை ஏந்தும் பிராட்டிநீ' (பெருந்திருப்...பி.த.ஊச.6) மகிடனைச் சாய்த்து நின்று ஆடியவள் - 'மகிடன் தலைமேல் அந்தரி' (அபிராமி அந்.8) 'கானத்து எருமை கருந்தலைமேல் நின்றாயால்' - (சிலம்பு வேட்டுவரி)

21. பரைகாண் பராபரைகாண் பஞ்சவண் ணத்திகாண் பார்வதிகாண்
தரைகாண் முதற்படும் தத்துவம் காண்அந்தத்
தூண்மனத்தோர்
நிரைகாண் நில(வு)ஒளிகாண் அந்த நீள்மதி வெங்கதிர்காண்
முறையால் வணங்கிய சித்தர்கள் போற்றிய முக்கணியே.

**குறிப்புரை :** பரை = தலைவி. பராபரை = தலைவியர்க்கு மேலான தலைவி. பஞ்ச வண்ணத்தி = ஐவகை வண்ணத்தில் நின்று செயற்படுகின்றவள். தரை = பூமி. தூண் = ஆற்றல். நிரை = ஒழுங்கு.

**பொழிப்புரை :** சித்தர்கள் முறைப்படி வணங்கிப் போற்றிய இவள் முக்கண்களுடையவள்; ஐவகை நிறத்தினளாய்ச் செயற்படுகிறவள்; இப்பூமி, முற்பட்டுத் தாங்கும் தத்துவங்கள், தூண்போன்ற ஆற்றல் உடைய மனத்தவரின் வாழ்க்கை ஒழுங்கு, நிலவின்ஒளி, அந்நிலவும், பெரிய வெப்பம் மிக்க ஞாயிறும் இவளே.

**விளக்கம் :** திருமுக்கீசுவரம் என்ற இன்றைய உறையூர்ச் சிவன் ஐவண்ணநாதர் - பஞ்சவண்ணேசுவரர். இறைவி பஞ்சவண்ணத்தி.

22. *முக்கணி அக்கணி மோகினி சூலினி மூவுலகும்*
*திக்கும்திக் கந்தமும் தான்சுழன்(று) ஆடித் தீரமொடும்*
*ஒக்கநின்(று) ஆடிய ஒண்ணுதல் பூங்கொடி உள்மகிழ்ந்தே*
*எக்கார ணத்தும் கருஅடை யா(து) என்னை ஏற்றவளே.*

**குறிப்புரை :** முக்கணி = மூன்று கண்களையுடையவளே. அக்கு அணி = உருத்திராக்கமாலை அணிந்தவளே. சூலினி = முத்தலைச் சூலம் ஏந்தியவளே.

**பொழிப்புரை :** திருமகள், கலைமகள், ஞானப்பெருமகள் என்ற முக்கண்களையுடையவளே; உருத்திராக்க மாலை அணிந்தவளே, மோகினியே, முத்தலைச்சூலம் ஏந்தியவளே, மூவுலகு, திசை, திசை முடிவு என்று எங்கும் தான்சுழன்று ஆடிய ஒளிபொருந்திய நெற்றியுடைய பூங்கொடியே, எக்காரணம் பற்றியும் நான் மீண்டும் பிறவாதவாறு என்னைக்காத்து ஏற்றுக்கொண்டவள் நீயாவாய்.

**விளக்கம் :** 'முக்கணி' - 'கன்னங்கரிய குழலும்கண் மூன்றும் கருத்தில் வைத்து' (அபி.அந்.53). 'திருமகள் வலக்கண் வாக்கின் சேயிழை இடக்கண் ஞானப்பெருமகள் நுதற்கண் ஆகப்பெற்று வான்செல்வம் கல்வி அருமை வீடளிப்பாள்' - (திருவிளையா..19:2). சிவனுடன் ஒக்க நடனமாடியது - 'காளியோடுஆடக்கனல் உமிழ் கண்ணுதல் மீளி ஆடுதல்' (சிதம்பரச் செய்யுட்.71). மீளி = கூத்தப்பிரான். அம்மையை வணங்குவோர் பிறவார் - 'பச்சைக் கொடியைப் பதித்து நெஞ்சில் இடரும் தவிர்த்து இமைப்போது இருப்பார்



பின்னும் எய்துவரோ, குடரும் கொழுவும் குருதியும் தோயும் குரம்பையிலே'. (அபி.அந்.48).

23. *ஏற்றவள் என்பிழை எண்ணில ஆயினும் எண்ணலின்றி*
*மாற்றித் தடுத்(து) என்னை ஆட்கொண்ட சுந்தரி வாமத்திலே*
*ஏற்றுக் கொடியுடை யானிடம் கூடி இருக்கின்றவள்*
*மாற்றறி யாத செழும்பசும் பொன்னங்கள் மாங்குயிலே.*

**குறிப்புரை :** வாமம் = இடதுபக்கம். ஏற்றுக்கொடி = விடைக்கொடி.

**பொழிப்புரை :** என்பிழைகள் எண்ணற்றனவாயினும் அவற்றைப் பற்றிஎண்ணாமல் என்னைத் தன் அடியவனாக ஏற்று என்பிழைகளைத் தடுத்து மாற்றி ஆட்கொண்ட அழகி, விடைக்கொடி ஏந்திய சிவபெருமானின் இடதுபக்கத்தில் குடியிருப்பவள், மாங்குயில் ஆகிய இவள் மாற்றறியாத செழும் பசும்பொன் ஆவாள்.

**விளக்கம் :** 'மன்று ஆடும் செங்கண் விடைக்கொடியோன்' - (முத்துக்குமார்...பி.த.செங்கீ.10.) 'சீர்கெழு கொடியும் அவ்ஏறு என்ப' - (புறம்).

24. *மாங்குயில் கூவும் தவத்துறை வாழ்கின்ற மாங்குயிலை*
*நீங்காப் பெருந்திரு நேரிழை தன்னைஅந் நீண்மறைசொல்*
*ஓங்கார மாய்அதன் உள்ஒலி யாய்ஒளி யாய்உணர்வில்*
*ரீங்கார மாக நினைத்திருந் தேன்துயர் நீங்கினவே.*

**குறிப்புரை :** ரீங்காரம் = அம்மையின் பீஜமந்திரம் ஆகிய 'ஹ்ரீம்' என்பது. ஒலி = நாதம். ஒளி = விந்து.

**பொழிப்புரை :** குயில்கள் கூவும் மாஞ்சோலைகளையுடைய திருத்தவத்துறையில் எழுந்தருளியுள்ள மாங்குயிலாகிய பெருந்திரு நீங்காதவளை, நான் அந்தப் பெரிய மறைகள் கூறும் ஓங்காரமாகவும் அதன் உள்ஒலியானநாதம், ஒளியான விந்து ஆகவும் என் உணர்வில் நீங்காத ரீங்காரமாகவும் - ஹ்ரீம் என்ற பீஜ மந்திரமாகவும் இவளை நினைத்திருந்தேன். அதனால் என் துயரங்கள் நீங்கின.

**விளக்கம் :** ரீங்காரியாகவும், ஓங்காரியாகவும் உள்ளவள்.

'ஓங்காரி என்பாள் அவள்ஒரு பெண்பிள்ளை
நீங்காத பச்சை நிறத்தை உடையவள்
ஆங்காரி ஆகியே ஐவரைப் பெற்றிட்டு
ரீங்காரத் துள்ளே இனிது இருந்தாளே'

- (திருமந்திரம்1063)

ஐவர் - சதாசிவன், மயேச்சுரன், உருத்திரன், திருமால், பிரமன்.

ஐவர் - தொகைக்குறிப்பு.

25. நீங்கியது) என்வினை நெஞ்சில் துயரங்கள் நீள்புவியில்
ஓங்கிய(து) என்புகழ் ஒன்றும்குறைவிலை உற்றபகை
ஏங்கின வெம்பிணி இல்லை என்(று) ஆயின என்னைஇனித்
தாங்கும் கருப்பையும் தாயும்இன் றாகித் தவிர்ந்தனவே.

**குறிப்புரை :** தவிர்ந்தன = நீங்கின.

**பொழிப்புரை :** இப்பெருமாட்டியின் கருணையால் என் மனத்துயரங்களும் என் ஊழ் வினைகளும் என்னை நீங்கின. உலகில் என்புகழ் குறைவின்றி ஓங்கியது; எனக்கு வாய்த்த பகைகள் என்னை ஏதும் செய்ய இயலாமல் ஏங்கின; கொடிய நோயும் எனக்கு இல்லை என்றாயின; இனி என்னைச் சுமக்கும் கருப்பையும் தாயும் கூட எனக்கு இல்லை - பிறப்பில்லை.

இலை - இடைக்குறை. இல்லை - இருதிணை ஐம்பால் மூவிடப் பொதுவினை.

26. வேய்ஒத்த மென்தோள் விரிகம லாலய மெல்லியலாள்
தாய்எனத் தெய்வமும் வே(று)உண்டு கொல்சென்று
சார்வதற்கே
தீயொத்துக் கொண்டது வேபெரும் புண்ணியம் நெஞ்சகமே
பேய்ஒத்த கூற்றுவன் தண்டம்நம் பாலிற் பிழைபட்டதே.

**குறிப்புரை :** தண்டம் = தண்டாயுதம் / தண்டனை.

**பொழிப்புரை :** நெஞ்சமே! மூங்கில் ஒத்த தோள்களுடன் மலர்ந்த தாமரையில் இருக்கும் இந்தப்புகழத்தக்க அன்னையைத் தவிர, அடைக்கலம் புகத்தக்க தாய் என்று கூறத்தக்க தெய்வம் வேறு இல்லை. தன்னைச் சார்ந்த பொருள்களைத் தூய்மைப்படுத்தித் தன்மயமாக்கும் தீயினை ஒத்த இவளை நான் என் தாயாகக் கொண்டுள்ளது பெரும்புண்ணியம். இதனால் கூற்றுவனது தண்டாயுதம் நம்மளவில் செல்லாதது ஆயிற்று.

**விளக்கம் :** தன்னைச் சார்ந்த பொருள்களைத் தன்மயமாக்கி அவற்றின் மாசு தீர்ப்பது, தீயினுக்கும் அருள்தரு பெருந்திருப்பிராட்டிக்கும் உரிய ஒப்புமைகள்.

இச்செய்யுள் உவமையணி.



27. தேவரும் யாவரும் தேறிய மாமறை தேர்ந்துகொண்டு
மூவரும் தேடும் முதல்வியைச் சிந்தையுள் முன்நிறுத்தி
மேவரும் பேரின்ப வீட்டினை வேண்டி விழித்திருந்து
நாஅரும் பாக்கொண்டு நான்புனைந்(து) ஏத்துதல்
நகைக்(கு) இடமே

**குறிப்புரை :** மேவரும் = சென்று பொருந்துதற்குரிய அரிய. விழித்திருந்து = பிறவற்றில் கவனம் செலுத்தாது அவளையே எண்ணி இருந்து. நகை = ஏளனம் / கேலி. அரும்பா = அரிய பாக்கள்.

**பொழிப்புரை :** தேவரும் பிறரும் வேதத்தை ஆராய்ந்து கொண்டு, நான்முகன், மால், அரன் ஆகிய மூவரும் தெளிதற்கு இயலாது தேடிக் கொண்டிருக்கும் முதல்வியை, நான் மனத்தில் முன்னிலைப்படுத்திப் பிறர்யாரும் எளிதில் சென்று பொருந்துதற்கு அரிய வீடுபேறு பெறவேண்டிப் பிறவற்றில் கவனம் செலுத்தாது அவளையே எண்ணி இருந்து, என் நாவினால் அரிய பாக்களைப் பாடி அவளைப் போற்றுதல் பிறரது கேலிக்கு உரிய செயலாகும்.

**விளக்கம் :** மூவராலும் இயலாததைப்பெற நான் முனைதல் கேலிக்குரியது என்றார். நான்புனைந்து ஏத்துதல் நகைக்கு இடம் - 'நின்தாளிணைக்கு என் நாத்தங்கு புன்மொழி ஏறியவாறு நகையுடைத்தே' - (அபி.அந்.26). அம்மையையே தியானித்து இருத்தல்- இதனை 'விழித்து உறங்கல்' என்பர். பிறவற்றில் உறக்கமும் அம்மைபற்றிய நினைவில் விழிப்பும் கொண்டிருத்தல் என்பது இதன் பொருளாகும்.

மூவரும் - முற்றும்மை. தொகைக் குறிப்பும் ஆகும்.

28. இடம்எது நாள்எது எவ்வெவை பூசனைக்(கு) ஏற்பவைகள்
கடன்எது போற்றும் கலைஎது யாதொன்றும் கற்கின்றிலேன்
மடம்தவி ராஎன் மனம்போன போக்கெல்லாம்
வாழ்த்துகின்றேன்
மடல்அவிழ் தாமரை போலும்என் நெஞ்சகம் மாணிக்கமே.

**குறிப்புரை :** மடம் - அறியாமை.

**பொழிப்புரை :** மாணிக்கமே! நான் உன்னை வழிபடற்குரிய இடம், நாள், பூசனைக்குரியன, என்கடமை, போற்றும் கலை - முறைமை பற்றி ஏதும் அறியாதது மட்டுமின்றி அவற்றைக் கற்கவும் இல்லை; என்

மனம் போன போக்கில் உன்னை வாழ்த்துகின்றேன்; அன்றலர்ந்த தாமரை ஒத்தது என் உள்ளம்; எனவே நீவந்து அதில் எழுந்தருள்க.

**விளக்கம் :** கண்ணப்பநாயனார் காளத்தியப்பரிடம் திளைத்தது இவ்வகைப்பூசனை முறையால். இதனை 'அறிந்த நெறி பூசனை' (கண்ணப்ப....155) என்பார் சேக்கிழார் பெருமான்.

29. மாணிக்க வல்லி மரகத வல்லி மதிப்பரிய
ஆணிப்பொன் வல்லி அபிராம வல்லி அருமறைசொல்
காணிக்கும் என்னைக் கடைக்கணித்(து) ஏற்றுஇக் காரிருளில்
காணிக்கை என்தலை யாக்கொண்டு தாள்இட்ட கற்பகமே

**குறிப்புரை :** ஆணிப்பொன் = மற்றுயர் பொன். காணிக்கும் = கையுறை ஆக்கும் - தந்து உரிமை வழங்கும். தாள்இட்ட = திருவடி சூட்டிய.

**பொழிப்புரை :** அரிய வேதங்கள் கூறும் மாணிக்கவல்லி, மரகதவல்லி, மதிப்பிடற்கு அரிய ஆணிப்பொன்வல்லி, அபிராமி வல்லி என்று சிறந்த சொற்களை உனக்குக் காணிக்கையாக்கும் என்னை இவ்வுலகியலாகிய இருளிலிருந்து கரைஏற்றி, என் தலையினை என் காணிக்கையாக ஏற்றுக் கற்பகமே உன்திருவடிகளை அதில் சூட்டியருள்க.

**விளக்கம் :** திருவடிசூட்ட வேண்டுதலும் சூட்டப்பெறுதலும் - 'கோவாய் முடுகி அடுதிறல் கூற்றம் குமைப்பதன்முன் பூவார் அடிச்சுவடு என்மேல் பொறித்துவை' - (திருச்சத்திமுற்றம்.அப்பர்) 'நனைந்தனைய திருவடி என்தலைமேல் வைத்தார் நல்லூர் எம்பெருமானார் நல்லவாறே' - அப்பர். திருமு.6. இப்பதிகம் முழுதும் இது மகுடம்.

30. கற்பன கற்றிலேன் கற்றவ ரோடும் கலந்தறியேன்
நிற்பன நெஞ்சில் ஒருகோடி ஆசைகள் நிச்சயமே
அற்பன் எனக்கும்இவ் அம்பிகை பாதம் அனுதினமும்
பற்றும் படிக்(கு) என்ன புண்ணியம் வாய்த்த(து)இப் பார்தனிலே.

**குறிப்புரை :** நிச்சயம் = உறுதி.

**பொழிப்புரை :** கற்பனவற்றைக் கற்கவோ, அங்ஙனம் கற்றவரோடு கூடி வாழவோ அறியேன்; என் நெஞ்சில் கோடி ஆசைகள் உள்ளன என்பது உறுதி. ஆயினும் அற்பன் ஆகிய எனக்கும் கூட அருள்தரு



பெருந்திருப்பிராட்டியின் திருவடிகளை நாடோறும் மனத்தால் இறுகப் பற்றியிருக்கும் புண்ணியம் இவ்வுலகில் வாய்த்தது. இது என்ன அதிசயம்.

**விளக்கம் :** ஆசைகள் ஒரு கோடி - 'உண்பது நாழி உடுப்பது நான்கு முழம், எண்பது கோடி நினைந்து எண்ணுவன' - ஔவை.

நிச்சயமே என்பதை அற்பன் என்பதுடன் கூட்டி 'நிச்சயமே அற்பன்' எனினும் அமையும்; ஏற்றது கொள்க.

31. பார்களில் பற்பல வாம்உயிர் வாழப் பரிந்(து)மின்னிக்
கார்என்(று) இறங்கிக் கணிக்கரும் ஓடது காத்தமையால்
சீர்தரும் நல்லுண வாய்உண்ணும் நீருமாய்ச் சேர்ந்திருந்து
வார்ஆன்ற பூண்முலை யாள்இவ் உலகை வளர்த்தனளே.

**குறிப்புரை :** பார் = நிலம். பரத்தல், மின்னல், இறங்கல் என்பன மேகத்தின் செயல்கள். ஓடு அது = நீரோட்டத்தை. கணிக்கரும் = கணித்தற்கு அரிய = எண்ணற்ற.

**பொழிப்புரை :** கச்சணிந்த கொங்கைகளையுடைய இப்பெருமாட்டி, ஐவகை நிலங்களிலும் பல்வகைப்பட்ட உயிர்கள் வாழ, கார்மேகமாய்ப் பரந்து, மின்னி, நிலத்தில் மழையாய் இறங்கி, நிலத்தின் நீரோட்டம் காத்தமையால் நலம்தரும்நல்ல உணவுவகைகளுடன் பருகும் நீருமாய்ச் சேர்ந்து இவ்வுலகை வளர்த்து வருகிறாள்.

**விளக்கம் :** உயிர் வாழ்வுக்கு இன்றியமையாதன தூய காற்று, நன்னீர், நல்லுணவு. பொழியும் மழைநீர் தானேஉணவாவதுடன், தாவரங்களின் மூலம் தூய காற்றுக்கும் உணவுக்கும் வழி செய்வது. அதுபோல இவ்வம்மை தானே அருள்புரிவதுடன் பிற தெய்வங்கள் மூலமும் அருள்கின்றவள் என்றார். மழையின் சிறப்பினை வான்சிறப்பு அதிகாரக் குறட்பாக்களாலும் சிறப்பாக, 'துப்பார்க்கு' என்று தொடங்கும் குறட்பாவாலும் அறியலாம். அம்மையின் அருட்கொடை இதன் மூலமும் விளக்கப்பெறுகிறது.

32. வளரும் கருவினில் வாராமை வேண்டி வளர்தவத்தால்
கிளரும் கலைவழி யோகம் பயின்று கதிகலங்கித்
தளரும் உடல்நிலை தத்தளிக் காது தமிழதுவாய்
உளறும் படிக்(கு)என்னை வைத்தாள் தவத்துறை உத்தமியே.

**குறிப்புரை :** வளரும் கருவினில் வாராமை = பிறவாமை. கலை = இடகலை பிங்கலை. கிளரும் = மேல் எழும். கதி = நிலை. உளறும்படி = பாடலால் பிதற்றுமாறு.

**பொழிப்புரை :** திருத்தவத்துறையில் எழுந்தருளியுள்ள உத்தமி ஆகிய இவ்வன்னை, நான் மீண்டும் பிறவாதிருக்க, மேன்மேலும் தவநெறிநின்று, மேன்மேலும்மிகும் இடகலை பிங்கலை வழிகளில் ஆன யோகநெறி நின்று, அதனால் சிலநேரம் நிலை கலங்கியும் உடல் தளர்ந்தும் தத்தளிக்காது, தமிழ் மொழியில் என்னைப் பாடல் மூலம் பிதற்றும்படி வைத்தாள்.

**விளக்கம் :** 'வாய்விட்டுப் பாடினால் நோய்விட்டுப் போகும்' என்பது அனுபவமொழி. அப்படிப்பாடும்போது பாடுகிறவர் குரல்ஒலி செவிக்குழலை நிரப்புவதால் புறஒலிகளைக் கேட்கும் வாய்ப்புத் தடைப்படுவதால் மனம் குவியும். எனவேதான் அருளாளர்கள் 'ஆரூரா என்றென்றே அலறாநில்லே' என்பதை வற்புறுத்தினர்.

*32. உத்தமி காண்இவ் வுயிர்க்(கு)உணர் வாய்உயிர் என்பவைகள்*
*அத்தனைக் கும்அவ ளேஅன்னை ஆதலின் அன்புசெய்வார்*
*சித்தம்நன் றாகச் சிவன்இடம் போலத் திரிபுரைதான்*
*ஒத்துக் குடியிருப் பாள்இந்த உண்மை உணர்மின்களே.*

**குறிப்புரை :** சிவன் இடம் = சிவபிரானது இடப்பாகம். திரிபுரை = சுத்த மாயை, அசுத்த மாயை, பிரகிருதிமாயை ஆகிய மூன்றையும் இடமாகக் கொண்டவள். ஒத்து = மனம்விரும்பி.

**பொழிப்புரை :** உத்தமி ஆகிய அருள்தரு பெருந்திருப்பிராட்டி, உயிர்களின் உணர்வாய், உயிர்க்குலம் அனைத்துக்கும் அன்னையாய் உள்ளவள். எனவே அவளது திருவடிகட்கு அன்பு செய்வோர் மனம் தூய்மையுடன் விளங்குவதால் சிவபிரானது திருமேனியின் இடப்பாகத்தில் தான்இருப்பது போல் மகிழ்ந்து மும்மாயைகளிலும் இடம்கொண்ட அவள் அவர்களுடன் ஒத்து அவர்கள் மனத்தில் குடியிருப்பாள். இவ்வுண்மையை அனைவரும் உணருங்கள்.

*34. உணர்ந்திடில் அன்பே உயர்சிவம் ஆவதாம் உத்தமியும்*
*உணர்வினில் அருள்உரு வாய்இருக் கின்றவள் ஓதுமறை*
*உணரில்அவ் வன்பே அருளது வாய்உல(கு) ஊட்டுவிக்கும்*
*உணர்வினில் அன்புடை யார்எங்கள் அம்மைக்(கு) உயர்ந்தவரே.*



**குறிப்புரை :** ஊட்டுவிக்கும் = வாழ்விக்கும்

**பொழிப்புரை :** உணர்ந்து பார்த்தால், அன்புதான் அனைத்திலும் உயர்ந்துநிற்கும் சிவபரம்பொருள் என்பதும், அம்மை அப்பனது உணர்வில் அருள் உருவாய் இருக்கின்றவள் என்பதும், மறைகள் எல்லாம் அந்த அன்பே அருளாய்ப் பரிணமித்து உலகை வாழ்விக்கும் என்று கூறுவதும், அத்தகு அன்புடையவர்களே இவ்வம்மையின் நோக்கில் உயர்ந்தவர்கள் என்பதும் விளங்கும்.

**விளக்கம் :** அன்புதான் சிவம் - 'அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார், அன்பே சிவம் ஆவது ஆரும் அறிகிலார் - (திருமந்திரம் 437). 'அருளது சத்தியாகும் அரன்தனக்கு' - (சித்தி.சுபக்.239). அருள், அன்பின் வளர்ச்சியே - 'அருள் என்னும் அன்பு ஈன்குழவி' (திருக்குறள்757) அருளிற்பெரியது அகிலத்தில் வேண்டும் பொருளில் தலையிலது போல் (திருவருட்பயன் 31) . 'அருளுண்டாம் ஈசற்கு அதுசத்தியன்றே' - (சிவஞானபோதம் 33)

*35. உயர்ந்தவர் எவ்வுயிர்க்(கு) ஊட்டலும் அன்னைக்கே ஊட்டல்என்பார்*
*மயர்(வு)டை யார்பல வஞ்சக வாசகம் வாய்ப்பறையாய்*
*அயர்(வு)இலா(து) ஓதி அறம்இ(து)என் பார்அவர்க்(கு) ஆருரைப்பார்*
*துயர்அறுக் கும்தூ மதியார் உரைகண்டு சூழ்மின்களே.*

**குறிப்புரை :** மயர்வு = மயக்கம். அறுக்கும் = போக்கும்.

**பொழிப்புரை :** உயர்ந்தவர்கள், எவ்வகைப்பட்ட உயிர்க்கும் உணவு ஊட்டலையே அம்மைக்கு உணவு ஊட்டுதல் என்பார். மனமயக்கம் உடையார் பற்பல வஞ்சகமான சொற்களை இடைவிடாது கூறி இதுவே அறம் என்று அறமல்லாதன கூறுவர். அவர்களை யாரும் திருத்த இயலாது. துயரம் நீக்கும் தூய அறிஞர்களின் உரையினை வாழ்வில் மேற்கொண்டு ஆராய்ந்து பாருங்கள்.

**விளக்கம் :** தூமதியார் உரை : 'அற்றார் அழிபசி தீர்த்தல்' (திருக்குறள் 226) 'ஆர்க்கும் இடுமின்' - (திருமந்திரம்)'யாவர்க்கும் ஆம் உண்ணும்போது ஒரு கைப்பிடி' (திருமந்திரம்) 'நடமாடக் கோயில் நம்பர்க்கு ஒன்று ஈயில் படமாடக் கோயில் பகவற்கு அது ஆமே' - திருமந்திரம் (1836)

36. சூழுங்கள் நல்லற மேதுணை ஆவது சொல்லிடுங்கால்
சூழுங்கள் நல்லற மேதவம் ஆவது சோர்வகற்றிப்
பாழ்படா வண்ணம் பரிந்(து)ஓம்பி இட்(டு)உண்டு பாவமற்றுச்
சூழ்ந்திருந் தேஉயிர் வாழ்கஎன்(று) அன்னை முன்சொல்லியதே.

**குறிப்புரை :** சூழுங்கள் = ஆராய்ந்து அறியுங்கள்.

**பொழிப்புரை :** நல்லறமே உயிர்க்குத்துணை என்பதையும் நல்லறமே தவம் ஆவது என்பதையும் ஆராய்ந்து அறியுங்கள். பிறரது மன உடல் சோர்வு அகற்றி, நம் வாழ்நாள் பாழ்படாதவாறு பிறரைப் பரிவுடன் பேணி உணவுஉண்டு, பிறர் பசிக்கத் தான் மட்டும் உண்ணும் பாவமின்றிக் கூடி இருந்து வாழவே அன்னை முன்பு சொன்னாள்.

**விளக்கம் :** பரிந்து ஓம்பல் - 'காக்கை கரைந்துண்ணும் காலம் அறிமினே' - (திருமந் 250) 'காகம் உறவு கலந்து உண்ணக் கண்டீர்' - (தாயுமான - காடும் கரையும்).

37. சொல்லிய தாமறைப் பெண்இனம் தாய்எனச் சொன்னபடி
நில்உனக்(கு) ஆண்மை நிலைக்கஎன் றால்இந்த நெஞ்சகத்தை
வெல்லுக வஞ்சப் புலன்வழி மேற்கொள்ளும் வீண்மயக்கம்
கல்லுக இவ்வழி யேஅம்மை ஆகமம் கூறியதே.

**குறிப்புரை :** கல்லுக = தோண்டி எறிக.

**பொழிப்புரை :** பெண்ணினத்தைத் தாய் என்று மறைகள் சொன்னபடி நட. உனக்கு ஆண்மை நிலைக்கவேண்டும் என்றால் உன்புலன்களை வெல்லுக. புலன்கள் வஞ்சனையாக மேற்கொள்ளும் வீணான மயக்கத்தைத் தோண்டி எறிக. இதுவே வாழ்வாங்கு வாழ அம்மையின் ஆகமநூல் சொல்லும் வழி.

**விளக்கம் :** பொறிகளிலும் புலன்கள் கொடியவை. பொறிகளை ஓரளவு கட்டுப்படுத்த இயலும்; ஆனால் புலன்களைக் கட்டுப்படுத்துதல் அரிது. எனவே புலன்களை 'மத யானைகள்' என்பார் திருவள்ளுவர். (24) 'ஐம்புலக்களிறும் தம்புலத்து இழுப்ப' - (பண்டார மும்மணி.2:41)

38. கற்பன நல்லன தீயன ஈதென்று கண்டுநெறி
நற்பணி வால்அறிந்(து) ஏற்பதற் கேஇந்த நல்லறிவு
அற்புத மாய்அகி லாண்டம்அ(து) ஆயஎம் அன்னைதனைப்
பொற்புறக் காட்டிச் சிவலோகம் ஈங்குறப் போதிக்குமே.



**பொழிப்புரை :** நன்னெறியில் மேற்கொண்ட நல்ல பணியினால் கற்பனவற்றுள் நல்லன இவை தீயனஇவை என்று பார்த்து அறிந்து கற்பதற்கே நமக்கு ஆறாவது அறிவு உள்ளது. அது அற்புதமாக அனைத்து அண்டங்களுமாக உள்ள எமது அன்னையை அழகுறக்காட்டி அவ்வழியில் நிற்கும் நமக்குச் சிவலோகத்தை இங்கேயே அடைய உரிய வழியைக் கற்பிக்கும்.

**விளக்கம் :** நற்கல்வி சிவலோகம் ஈங்குறப் போதிக்கும் - 'அறம் பொருள் இன்பம் வீடும் பயக்கும்'... (நீதிநெறி விளக்கம்).

39. ஈங்(கு)உறு வோம்என்(று) எண்ணிஅஞ்ச வோருக்(கு) இருநிதியாய்
ஈங்(கு)உறு வோர்க்கன்றி ஏதுநம் மோ(டு)உறும் எண்ணுதிரேல்
ஈங்(கு)உறுங் கால்செய்யும் நல்லற மேதுணை ஆகிநின்று
ஈங்கிருந்(து) ஏற்றி இணையடிக் கீழ்வைக்கும் எண்ணுகவே.

**குறிப்புரை :** ஈங்கு உறுவோம் = இவ்வுலகில் பிறப்போம். இருநிதி = பெருஞ்செல்வம். ஏற்றி = மேல்செலுத்தி.

**பொழிப்புரை :** இவ்வுலகில் மீண்டும் பிறப்போம் என்று அஞ்சுகின்றவர்க்குப் பெருஞ்செல்வமாக அமைவது இவ்வுலகில் பிறக்குங்கால் நாம் செய்யும் நல்லறமேயாகும். இங்குப் பிறந்தவர்க்கல்லாமல் அது உதவாது. இங்குச் செய்யும் நல்லறம் உயிர்க்குத் துணையாகி உயிரை மேல்செலுத்தி வீட்டுலகில் வாழவைக்கும் என்பதை எண்ணுக.

**விளக்கம் :** வீட்டுலகில் உய்க்கும் வாய்ப்பு இம்மண்ணுலகுக்கே இயல்வது. தேவருலகும் நரகமும் புண்ணிய, பாவப்பயனை அனுபவித்துக் கழிப்பதற்கே உரியன. எனவே

புவனியில் போய்ப்பிற வாமையின் நாள்நாம்
போக்குகின் றோம் அவமே; இந்தப் பூமி
சிவன்உய்யக் கொள்கின்ற வாறென்று நோக்கித்
திருப்பெருந் துறைஉறை வாய்திரு மாலாம்
அவன்விருப்பு எய்தவும் மலரவன் ஆசைப்
படவும்நின் அலர்ந்தமெய்க் கருணையும் நீயும்
அவனியில் புகுந்துஎமை ஆட்கொள்ள வல்லாய்
ஆரமு தேபள்ளி எழுந்தருளாயே-

திருவா.திருப்பள்ளி.10

என்பார் வாதவூரார்.

40. எண்ணுங்கால் நல்லொழுக் கேஅறம் காக்கும் இருள்தவிர்ந்து
பண்அறம் நல்லன்பு தன்னைப் பெருக்கும் பரிந்தஅன்பு
மண்ணில் அருளைப் பெருக்கிடும் அவ்வருள் மாதங்கியின்
தண்அருள் கூட்டித் தனிவீடு சேர்ப்பிக்கும் சத்தியமே.

**குறிப்புரை :** இருள் = ஆணவம். மாதங்கி = பார்வதியாகிய இவள். தனிவீடு = ஒப்பற்ற வீடுபேறு.

**பொழிப்புரை :** ஆராயுங்கால் நல்லொழுக்கமே அறத்தினைக் காப்பது. ஆணவஇருளில் அகப்படாமல் செய்யும் அறம்; தூய அன்பைப் பெருக்கும். பிறர்மீது பரிவு கொள்ளும் அவ்வன்பு உலகில் அருளைப் பெருக்கும். அந்த அருள் பார்வதி தேவியாகிய இவ்வன்னையின் தண்ணருளை நம்மிடம் கூட்டி நம்மை ஒப்பற்ற வீடுபேற்றில் சேர்க்கும். இது சத்தியமாகும்.

**விளக்கம் :** நல்லொழுக்கம் → நல்லறம் → அன்பு → அருள் → திருவருள் → வீடுபேறு. எனவே நல்லொழுக்கமே அனைத்துக்கும் அடிப்படை. 'நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம்' (குறள் 138).

41. சத்தியம் ஏற்கும் குரல்கள் இவள்ஒலி தான்மெலிந்தே
நித்தம் அலைபவர் போல்அன்னை அன்பரை நீள்நிலத்தில்
கத்தி அழைத்(து)எங்கும் சோதிக்கின் றாள்என்று கண்டுகொண்டு
அத்தம் பயன்பெற ஆருயிர்க்(கு) இட்(டு) உண்ணும்
அன்புசெய்யே.

**குறிப்புரை :** ஏற்கும் = யாசிக்கும். அத்தம் = நமதுகை.

**பொழிப்புரை :** நம்மை யாசிக்கின்ற குரல்கள் அன்னையின் குரலேயாகும்; இது சத்தியம். உடல் மெலிந்து நாடோறும் உணவுக்கு அலைபவர்போலத்தன் அன்பர்களை இப்பேருலகில் உணவுக்குக் கத்திக் கூப்பிடுமாறு செய்து, நம்மைச் சோதிக்கிறாள் என்று கண்டு கொண்டு நாம் நம் கையினைப் பெற்ற பயனாகிய ஆருயிர்க்கு உணவு இட்டு உண்ணும் அன்பு செய்து வாழ்க.

**விளக்கம் :** செல்வத்துப்பயனே ஈதல் - 'அற்றார் அழிபசி தீர்த்தல் அஃது ஒருவன், பெற்றான் பொருள்வைப்புழி' (குறள்.226)

42. அன்புசெய்திட்டு வாழ்கின்ற நல்லோர் அறிவுடையோர்
அன்பில் பிறந்து நிலைக்கின்ற தாம்அகி லாண்டமெல்லாம்
அன்பே அரன்உரு ஆகும்நம் அன்னை அருள்உருவம்
அன்பில் கலந்த தமிழ்மறை ஆய்ந்(து)அறம் ஆற்றுமினே.



**பொழிப்புரை :** பிறர்பால் அன்பு காட்டியும் உணவிட்டு உண்டும் வாழும் நல்லவர்களே அறிவு உடையவர்கள். அகில அண்டங்களும் அன்பில் நிலைத்துள்ளன. அன்பே சிவன் உரு; நம் அன்னை அருள் உரு. உலகவர் மீது கொண்ட அன்பினால் நம் தமிழ்மறை கூறுவதை ஆராய்ந்து அறம்பேணுங்கள்.

**விளக்கம் :** 'அன்பே சிவமாவது'; 'அருளது சத்திஆகும் அரன்தனக்கு' 'அன்போடு இயைந்த வழக்கு என்ப ஆருயிர்க்கு என்போடியைந்த தொடர்பு' - (குறள் 73) என்பன அன்பின் உயர்நிலை உணர்த்துவன.

43. ஆற்றும் தவத்துறை நாயகிக்(கு) அன்புசெய்(து) ஆற்றுதவம்
சோற்றுக் குழியின் துடிப்(பு) ஆற்று தல்மறை சொன்னபடி
ஆற்றும் கடமைகள் யாவினும் மேம்பட்ட(து) அவ்வறமே
ஆற்றுங்கள் சோறிட்(டு) அறம்வளர்ப் பீர்அது வாம்பயனே.

**குறிப்புரை :** சோற்றுக்குழி = வயிறு. துடிப்பு = பசித்துடிப்பு.

**பொழிப்புரை :** தவம்புரியும் தவத்துறைத் தலைவி மீது அன்பு செய்து தவம் செய்தல் என்பது தமிழ்மறை கூறியபடி பசித்த வயிற்றுக்குச் சோறிட்டுப் பசித்துடிப்பு ஆற்றுதலேயாகும். நாம் செய்ய வேண்டிய கடமைகளில் மேம்பட்டது பசித்தோர்க்கு உணவிடுதலே. எனவே சோறிட்டுப் பசியாற்றுங்கள். அதுவே மனிதப்பிறப்பின் பயன் ஆகும்.

**விளக்கம் :** உணவிடுதலே பேரறம் - 'ஆற்றாமாக்கள் அரும்பசி களைவோர், மேற்றே உலகின் மெய்ந்நெறி வாழ்க்கை' மணிமேகலை.

44. பயன்கொள வேண்டில் புலைகொலை நீக்கிப் பயம்தவிர்த்து
அயன்மனை மாதர் அவாவறுத்(து) ஆணவம் அற்றுநின்று
நயனுடைச் சொல்லொடும் இன்முகம் காட்டி நடுநிலைத்து
மயல்மிகும் போ(து)அந்த மாதாவின் நாமத்தை வாழ்த்துவீரே.

**குறிப்புரை :** பயன் = மனிதப் பிறப்பின் பயன். நயன் = அருள். மயல் = உலகமயக்கம்.

**பொழிப்புரை :** மனிதராய்ப் பிறந்ததன் பயனைப் பெற வேண்டுமானால், புலால் உண்ணல் கொலை ஆகியன தவிர்த்து, அச்சம் நீக்கி, பிறர் மனைவி மீது கொள்ளும் காமம் அறுத்து, ஆணவமற்று, அருள்பொருந்த இன்சொல் கூறி, இன்முகம் காட்டி,

நடுவுநிலையில் நிலைபெற்று, உலகியல் மயக்கம் உண்டாகும்போது இத்தாயின்திருப்பெயர்கூறி அம்மயக்கம் தீருங்கள்.

**விளக்கம் :** கொலைபுலைநீக்கல் - 'கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி, எல்லா உயிரும் தொழும்' (குறள்260) பிறன்மனை அவா வறுத்தல் - 'விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந்தார்இல் தீமை புரிந்து ஒழுகுவார்' (குறள் 143) ஆணவம் அற்று - 'செருக்கும் சினமும் சிறுமையும் இல்லார்ப், பெருக்கம் பெருமித நீர்த்து' (குறள்431). நயனுடைச் சொல்லும் இன்முகமும் - 'முகத்தான் அமர்ந்(து) இனிது நோக்கி அகத்தானாம்', இன்சொல்லினதே அறம், - (குறள் 93).

45. *வாழ்த்துமின் கோபம் குரோதங்கள் போக்குமின் வாழவென்றால்*
*தாழ்த்துமின் சென்னி அடியார் தமக்குப்பொய் தான்அகற்றி*
*பாழ்த்திட்ட நெஞ்சகம் பக்குவம் ஆக்கிப் பரப்பிஅன்பை*
*வாழ்த்துங்கள் அன்னை மகிழ்ந்துமிக்(கு) இன்பம் வழங்குவளே.*

**குறிப்புரை :** குரோதம் - பகை.

**பொழிப்புரை :** நீங்கள் வளமாக வாழப் பிறரை வாழ்த்துங்கள்; கோபம் பகை ஆகியவற்றைப் போக்குங்கள்; அடியவர்கட்குத் தலைதாழ்த்தி வணக்கம் செலுத்துங்கள்; பொய்யினை விலக்கிப் பாழ்பட்ட உள்ளத்தைப் பக்குவப்படுத்தி அன்பினைப் பரப்பி வாழ்த்துங்கள்; இவற்றால் நம் அன்னை மகிழ்ந்து நமக்கு இன்பம் அருளுவாள்.

**விளக்கம் :** வாழ்த்துதல் இருமுறைவந்தது அதன் சிறப்புக்கருதி. வாழ்த்துதல் வாழ்த்தியவரை வாழ்விக்கும் - 'வாழ்த்துவதும் வானவர்கள் தாம் வாழ்வான்' - (திருவா.திருச்சத.அறிவுறுத்துதல்.6) 'வாழ்த்துவோர் வாழ்த்தப்பெறுவர்' (உளவியல்பொன்மொழி)

46. *வழங்கும் கருணைப் பெருந்திரு மாமயில் மன்னுசெல்வம்*
*வழங்கும் பெருங்கல்வி வாழ்நாள் சிறந்த வடிவமும்தான்*
*வழங்கும் புவியில் வசப்படும் வேண்டுவ வாழ்த்தி நின்றால்*
*வழங்கும் சிவானந்தம் வாமத்(து) இருக்கும் மலைக்கன்னியே.*

**குறிப்புரை :** வாமம் = இடப்பாகம்.

**பொழிப்புரை :** சிவபெருமானது இடப்பாகம் உள்ள மலைக்கன்னியாகிய இவளை வாழ்த்தினால்; கருணைப் பெருந்திரு ஆகிய இம் மாமயில் நமக்குத் தன் அருளை வழங்கும்; அதன்மூலம்



நிலைத்த செல்வம், பெருங்கல்விச் சிறப்பு, வாழ்நாள், வடிவழகு ஆகியன வழங்கும்; நாம் வேண்டுவன நம் வசப்படும்; இவ்வுலகிலேயே சிவானந்தமும் வழங்கும்.

**விளக்கம் :** 'தனம்தரும் கல்விதரும்' .. என்ற அபிராமி அந்தாதிப் பாடலை உடன்வைத்து எண்ணி மகிழ்க.

47. *கன்னியைக் கன்னல் சிறுமியை நெஞ்சில் காதலித்து*
*மன்னும் பெருந்தவ வாழ்க்கையை மேற்கொண்டு வாய்முணுத்துக்*
*கன்னல் பெருஞ்சுவைத் தேன்ஊற உள்ளம் கசிந்துநின்றால்*
*உன்னற் கரிய நிலைபெறு வீர்இஃதை உன்னுமினே.*

**குறிப்புரை :** கன்னல் = கற்கண்டு. கன்னல் = கரும்பு. உன்னற்கு அரிய = நினைத்தற்கரிய.

**பொழிப்புரை :** கற்கண்டினை ஒத்த இந்த இளம் பருவத்தினளை மனத்தில் பத்தியுடன் நினைத்து, நிலைத்த பெருந்தவ வாழ்வை மேற்கொண்டு, அவளுக்குரிய மந்திரத்தைப் பிறர் செவிப்படாதவாறு முணுமுணுத்து, கரும்பின் சுவைபோன்ற இனிமை நம் மனத்தில் ஊற மனம் கசிந்து உருகி வழிபட்டால், யாரும் நினைத்தற்கரிய உயர் நிலையினை இம்மையிலும், வீட்டின்பத்தை மறுமையிலும் பெறுவீர். இதனை எண்ணுங்கள்.

**விளக்கம் :** மந்திரங்கள் உதடு பிரியாமல் உச்சரிக்க வேண்டுவன என்ற மரபு பற்றி முணுமுணு த்து என்றார்.

48. *உன்னுவ தேநெறி வேடத்தி னால்பயன் ஒன்றுமில்லை*
*மன்னும் தவநெறி மாசற்(று) இருக்கை மனத்தினிடைப்*
*பன்னும்நல் அன்பு பதியும்என் றால்அங்குப் பால்மொழிச்சி*
*கன்னிநம் அன்னை குடியிருந்தாள் என்று காட்டுவதே.*

**குறிப்புரை :** உன்னுவதே = இடைவிடாது நினைப்பதே.

**பொழிப்புரை :** இவ்வம்மையை இடைவிடாது நினைப்பதுதான் வழிபாட்டு நெறி. இதனை விடுத்து வேடம் பூண்பதால் பயனில்லை; நிலையான தவவாழ்க்கை என்பது மனமாசற்று இருப்பதே ஆகும். இவள்மீது நாம் காட்டும் அன்பு நம் மனத்தில் படிந்தால் அம்மனத்தில் பால்போன்ற நன்மொழி பேசும்நம் அன்னை - கன்னியாகிய தாய் நம் மனத்தில் குடியிருந்தாள் என்பதை அதுவே காட்டும்.

**விளக்கம் :** மனமாசற்றநிலையே அறவாழ்வு - தவவாழ்வு - 'மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்து அறன்' - (குறள் 34)

49. காட்டும் கரதலம் புன்னகை கூர்விழி கள்ளமற்றால்
ஊட்டும் பசித்துக் கிடக்கஒட் டாள்உனை உள்ளபடி
வாட்டும் பெரும்பிணி வான்பகை வெந்துயர் வையகத்தில்
ஓட்டும் பெருவலி உண்டாம் உனக்(கு)இனி ஒப்புமுண்டோ.

**பொழிப்புரை :** நம் மனத்தில் வஞ்சனை இல்லாதிருப்பின் நம் அன்னை நமக்குத் தமது அபயவரதகரங்கள், புன்னகை, கூர்விழியின் அருட்பார்வை ஆகியன வழங்கும். நாம் பசித்துக் கிடக்க அவள் மனம் பொறுத்திராள்; உள்ளபடி வாட்டும் பெருநோய்கள், கொடும்பகை, வெந்துயர் ஆகியவற்றை ஓட்டும்; அதனால் பெரிய வலிமை உண்டாகும். உலகில் உனக்கு இனி ஒப்புமை யாரும் இல்லை.

**விளக்கம் :** வாட்டும் பெரும்பிணி...ஓட்டும் - பிறப்பு மூப்பு பெரும்பசி வான்பிணி, இறப்பு நீங்கி இன்பம் வந்து எய்திடும்,சிறப்பர் சேறையில் செந்நெறியான் கழல், மறப்பதின்றி மனத்தினுள் வைக்கவே. (திருமுறை 5. திருச்சேறை) விழி - இடவாகுபெயர்.

50. ஒப்புக்(கு) ஒருவரும் இல்லா அழகிஎன் உள்ளத்திலே
அப்பினுள் உப்பென அண்ணிநின் றாள்எனக்(கு) அச்சமுண்டோ
தப்பேதும் இல்லை தவத்துறை நாயகி தாள்மலரும்
இப்பாவி நெஞ்சத்தை ஏற்றிட்ட விந்தையை என்னென்பதே.

**குறிப்புரை :** அப்பு = தண்ணீர். அண்ணி = நெருங்கி

**பொழிப்புரை :** தனக்கு ஒப்புமை யாரும் இல்லாத இவ்வழகி என் உள்ளத்தில் தண்ணீரில் கலந்த உப்புப் போல் கலந்து நெருங்கி நின்றாள். எனவே எனக்கு அச்சமில்லை. அவளது திருவடிகள் தவறேதுமின்றி என் உள்ளத்தில் நிலைக்கும். பாவியாகிய என் உள்ளத்தை அவள் தன் புக்கிலாகக் கொண்ட விந்தையை என்னென்பேன். (புக்கில் = நிலையாகக் குடியிருக்கும் வீடு).

நீரின் நெகிழ்ச்சி உப்பின் சுவைக்கு இடமளித்தது; அதுபோல் உள்ளத்தின் நெகிழ்ச்சி இவ்வன்னை எழுந்தருள இடமளித்தது; உள்ளம் அருட்பொலிவுற்றது என்று பொருத்துக.

உயிருடன் திருவருள் இரண்டறக் கலந்துள்ள நிலையைச் சிவஞான முனிவர்பிரான் தமது சிவஞான சித்தியார் உரைப் பாயிரச் செய்யுளில் 'பாணி உப்பு' என்று குறிக்கின்றார். இச்செய்யுள் உவமையணி.



51. எந்நேரம் தன்னிலும் யாமம் சிறந்ததே எம்மலரும்
பொன்ஆர் திருவடிக்(கு) ஆகும்செம் பூக்களே பூத்தஅன்பு
தன்னால் இயன்ற அள(வு)அவள் நாமங்கள் சாற்றிநித்தம்
பன்னாளும் ஏத்தி வழிபடப் பாவம் பறக்கின்றதே.

**குறிப்புரை :** யாமம் = நள்ளிரவு. செம்பூ = சிறந்தமலர்.

**பொழிப்புரை :** வழிபாட்டுக்குப் பிற எந்த நேரத்தை விடவும் யாமம் சிறந்தது; எம்மலரும் அழகிய திருவடிகட்கு உரிய சிறந்த மலர்களே. மலர்ந்த அன்புடன் தன்னால் இயன்ற அளவு அவளது திருப்பெயர்களை நாடோறும் சொல்லிப் பலநாள் போற்றிவழிபட நம் பாவம் அனைத்தும் பறந்துபோகும்.

**விளக்கம் :** வழிபாட்டுக்கு யாமம் சிறந்ததென்றாலும் 'நின்றும் இருந்தும் கிடந்தும் நடந்தும் நினைப்பது உன்னை'-அபி.அந்.10 என்பதால் எந்த நேரமும் தக்கதே என்க.

எம்மலரும் திருவடிக்குச் செம்மலர்களே - 'புல்இலை எருக்கம் ஆயினும் கடவுள் பேணேம் என்னா' -புறம்.

52. பறக்கின்ற சித்திகள் பாய்புனல் வெங்கதிர் பா(டு)அடக்கிச்
சிறக்கின்ற சித்திகள் சாகா மருந்துகள் தீயிலிட்டுக்
கறுக்கும் உலோகங்கள் மாற்(று)ஏற்று வித்தைகள் கற்றுமென்ன
உறக்கும்வெங் கூற்றினை ஒட்டஓங் காரியை ஓதுமினே.

**குறிப்புரை :** பாடு = துன்பம். உறக்கும் = மிகவும். வெம்மை = கொடுமை.

**பொழிப்புரை :** வானில் பறக்கின்ற சித்தி, வெள்ளப்பெருக்கு, வெப்பம் மிக்க நெருப்பு ஆகியவற்றால் ஏற்படும் துன்பங்களை ஒழித்துச் சிறப்புறும் சித்திகள், சாவாமருந்துகள் செய்தல், உலோகங்களைத் தீயிலிட்டுக் கறுக்காமல் செய்து அவற்றின் மதிப்பினை உயர்த்தும் இரசவித்தை ஆகியன கற்றும் பயனில்லை. மிகக்கொடிய கூற்றுவனை ஓட்ட ஓங்காரியாகிய இவளை எண்ணியிருங்கள்.

**விளக்கம் :** எமனை உதைத்த திருவடி அம்மையின் திருவடியே. 'வாமச்சேவடி தன்னால் சிறிது உந்தி உதைத்தான் கூற்றன் விண்முகில் போல் மண்ணுற வீழ்ந்தான்'. (கந்தபு...மார்க்கண்...253).

53. ஓதுங்கள் கூற்றுவன் தூதரும் ஓலைகொண்(டு) ஓடிவந்தால்
மோதும் படிக்(கு)அன்று சூலத்தை ஏவி முறியடிப்பாள்
ஏதும் கவலைகள் இல்லாமல் செய்யும் இணையடிக்கே
போகும் தவம்ஒன்று காண்தவம் ஆவது போற்றுமினே.

**குறிப்புரை :** மோதும்படிக்கு = எதிர்த்து அழிக்க. அன்று = அப்போதே.

**பொழிப்புரை :** கூற்றுவன் ஓலைதாங்கித் தூதுவருடன் வந்தால் அவர்களை எதிர்த்து அழிக்க அப்போதே தன் சூலப்படையை ஏவி அவர்களைமுறியடிப்பாள். எனவே அவள் திருப்பெயரையே சொல்லுங்கள். கவலைகள் ஏதும் இல்லாமல் செய்கின்ற அவளது இரு திருவடிகளையும் அடையும் இத்தவமே தவம். அத்தகு தவத்தைப் போற்றி மேற்கொள்ளுங்கள்.

**விளக்கம் :** கூற்றுவன் வரும்போதும் காத்தருள்க- 'வேலை வெங்காலன்என்மேல் விடும்போதே வெளிநில்' - (அபி.அந்.86). 'மாகோரகாலன் வரும்போது தமியேன் மனம் கலங்கித்தியங்கும் அப்போது வந்துன் அருட்போது தந்தருள் ஆதிகடவூரின் வாழ்வே' (அபிராமி பதிகம் 1 10:3-4).

54. போற்றும் திசைதொறும் பொன்னார்ந்த மேனியும் புன்னகையும்
கீற்றுப் பிறைநுத லும்கயல் கண்களும் கிஞ்சுகவாய்
ஊற்றும் தனிப்பேர் அருள்திரு வாசக ஊற்றமுமே
மாற்(று)ஒன்றும் இன்றி மனம்கொண்டு விம்மி மலர்கின்றதே.

**குறிப்புரை :** கிஞ்சுகவாய் = முள் முருக்கமலர் ஒத்த செவ்வாய். மாற்று = இணை. ஊற்றம் = ஆற்றல்.

**பொழிப்புரை:** எண்திசையோரும் போற்றும் அழகிய திருமேனியும், புன்முறுவலும், நிலவின் துண்டமாகிய பிறை போன்ற நெற்றியும், கெண்டைமீன் ஒத்த விழிகளும், முள்முருக்க மலர் ஒப்பச் சிவந்த வாயும், அது வெளிப்படுத்தும் அருள் பொருந்திய உன் சொல்லின் ஆற்றலும் ஆகியன தமக்கு இணைஏதுமின்றி என் மனத்தை நிரப்பிப் பூரித்து மலர்கின்றன.

பிறைநுதல்,கயல்கண், கிஞ்சுகவாய் உவமைத் தொகைகள்.



55. மலர்கின்ற மாமுகம் ஒக்கும் திருமுகம் வாய்த்த முத்துப்
புலர்கின்ற போ(து)அந்த வெண்மதி போல்ஒளி பொங்கும் எங்கும்
அலர்கின்ற தாமரை அஞ்சல் எனும்கரம் அன்னைஅடி
அலர்கின்ற தாமரை நெஞ்சகம் தன்னில் அமர்ந்திட்டதே.

**குறிப்புரை:** மா = திருமகள். புலர்தல் = சற்றே வெளிப்படல்.

**பொழிப்புரை:** மனம் மகிழும் திருமகளின் அழகிய முகம் ஒத்த அன்னையின் திருமுகமும், புன்முறுவல் பூத்தலால் சற்றே வெளிப்பட்ட முத்துப்போன்ற பற்களின் வெண்ணிலவு ஒத்த ஒளி எங்கும் பரவும் நகையும், அஞ்சாதே என்று மலர்கின்ற தாமரை போன்று உள்ள திருக்கைகளும், மலர்கின்ற தாமரை ஒத்த அன்னையின் திருவடிகளும் என் உள்ளத்தில் எழுந்தருளியுள்ளன. இச்செய்யுள் உவமையணி. (நான்கு உள).

56. அமரும் தவத்துறை அன்னையே பொன்னி அருங்கலைமா(து)
அமரும் தவத்துறை அன்னையே சூலி அரன்பாங்(கு) உள்ளாள்
அமரும் தவத்துறை ஆய்ச்சி வேதாகம அந்தத்தினாள்
அமரும் தவத்துறை நாயகிக் கண்பொன்(று)அ ழிவின்மையே.

**குறிப்புரை:** பொன்னி = திருமகள். கலைமாது = கலைமகள். சூலி=சூலம் ஏந்தியகாளிதேவி. அரன்பாங்கு உள்ளாள் = உமாதேவி. ஆய்ச்சி = தலைவி. பொன்று அழிவு = அருள்வதில் குறைந்து அழிவது. இன்மை = இல்லை.

**பொழிப்புரை:** திருத்தவத்துறைத் தலைவியே திருமகள், அருங்கலைமகள், சூலம் ஏந்திய காளிதேவி, சிவபிரானது இடப்பாகம் கொண்ட உமாதேவி, யாவர்க்கும் தலைவி, வேதாகமம் கூறும் எல்லையில் உள்ளவள். இவளிடம் பிறர்க்கு அருள்வதில் குறைந்து அழிவது என்பது இல்லை.

**விளக்கம்:** எத்தேவியுமாக இருந்து அனைத்தும் அருள்புரிகின்றவள் திருத்தவத்துறைப் பெருந்திருப்பிராட்டி என்றார்.

இச்செய்யுள் சொற்பொருள் பின்வருநிலையணி.

57. அழிவின்மை வேண்டில் அணுகிடு வீர்நமது அன்னையிடம்
ஒழிவின்றி நிற்கின்ற சிந்தைகண் டீர்நமக்(கு) உற்றதுணை
அழிகின்ற செல்வமும் போகமும் என்ஆம் அந்தகன்பால்
தெளிகின்ற ஞானத் திருவொன்று வெல்படை சிந்திக்கவே.

**குறிப்புரை:** ஒழிவின்றி = இடைவிடாது. என்ஆம் = என்ன பயனைத் தரும். அந்தகன் = எமன். (குருடன் -கருணைக் கண்ணில்லாதவன்) ஒன்று = பொருந்து. வெல்படை = வெற்றியே வடிவாக விளங்கும் படை - அன்னை.

**பொழிப்புரை:** நாம் அழியா நிலைபெற விரும்பினால், நம் அன்னையிடம் அணுகிடுவீர். இதன் பொருட்டு நமக்கு உற்ற துணை, அவளை இடைவிடாது நினைக்கின்ற உள்ளமே. எமன் நம்மை நெருங்காதிருக்க நிலையற்ற செல்வத்தாலோ அனுபவப் பொருள்களாலோ எப்பயனும் இல்லை. தெளிந்த ஞானத்திருவாய் விளங்கும் வெல் படையாகிய இவளையே நாம் சிந்தித்தால் போதும்.

**விளக்கம்:** எமனை அந்தகன் என்றது - 'எப்போதாயினும் கூற்றுவன் வருவன், அப்போது அந்தக் கூற்றுவன் தன்னைப் போற்றவும் போகான், பொருளொடும் போகான், சாற்றவும் போகான், தமரொடும் போகான் நல்லார் என்னான் நல்குரவு அறியான், தீயார் என்னான் செல்வர் என்று எண்ணான், தரியான் ஒருகணம் தறுகணாளன்' - கபிலர் அகவல். எதைப் பற்றியும் காணாதவனாதலின் அவனைக் குருடன் - அந்தகன் என்பர்.

58. *சிந்திக்கும் தோறும்முன் தேனூற்(று) எடுத்திடும் சேவித்திடில்*
*பந்திக்கும் ஊழ்வினை பற்றா(து) ஒழிந்திடும் பாரில்உள்ளோர்*
*வந்திப்பர் நல்லன எல்லாம்உன் வாழ்வில் வசம்நிற்குமால்*
*அந்தமில் பேரின்ப ஆய்ச்சிதன் காட்சியும் ஆகின்றதே.*

**குறிப்புரை:** பந்திக்கும் = கட்டியுள்ள. தேன் = இனிமை.

**பொழிப்புரை:** அம்மையைச் சிந்திக்கத் தொடங்கும் உள்ளத்தில் முதலில் இனிமை ஊற்றெடுக்கும்; வணங்கினால் நம்மைக் கட்டியுள்ள ஊழ்வினை நம்மைப் பற்றாது ஒழியும்; உலகவர் உன்னை வாழ்த்துவர்; நல்லன எல்லாம் நம் வாழ்வில் வசப்படும்; எல்லையற்ற பேரின்ப வடிவான இத்தலைவியின் அருட்காட்சியும் வாய்க்கும்.

**விளக்கம்:** இவ்வன்னையை மட்டுமன்றி அப்பனை நினைத்தால் அடையும் பயன்? 'சிந்திப்பரியன சிந்திப்பவர்க்குச் சிறந்து செந்தேன், முந்திப் பொழிவன முத்தி கொடுப்பன மொய்த்து இருண்டு பந்தித்து நின்ற பழவினை தீர்ப்பன பாம்பு சுற்றி, அந்திப் பிறையணிந்து ஆடும் ஐயாறன் அடித்தலமே' - அப்பர் - திருவையாறு.



59. *ஆக்கும் தவத்துறை அன்னைவெஞ் சூலி அமர்க்களத்தே*
*தாக்கும் தகர்க்கும்அத் தாக்கணங்(கு) ஆகையால் தாரணியில்*
*நோக்கும் பெரும்படை சூழினும் நேர்வந்து நின்றுன்னையும்*
*காக்கும் திரிபுரை காரமர் கண்டக் கயற்கண்ணியே*

**குறிப்புரை:** கார் = கரிய நஞ்சு

**பொழிப்புரை:** கரிய நஞ்சினை இடமாகக் கொண்ட திருக்கழுத்தினள் ஆகிய கயற்கன்னியாகிய தவத்துறை அன்னை, நலமெல்லாம் உண்டாக்குவாள்; கொடிய சூலம் ஏந்திய அவள் போர்க்களத்தில் நம் பகையைத் தாக்கும்; தவிடு பொடியாக்கும் தாக்கணங்கு எனவே இவ்வுலகில் சிறந்ததாக எண்ணும் பெரும்படைவந்து சூழ்ந்தாலும் எதிரே வந்து நின்று என்னை மட்டுமன்றி உன்னையும் காக்கும் திரிபுரையாவாள்.

**விளக்கம்:** கார் - பண்பாகுபெயர். உன்னையும் - இறந்தது தழுவிய எச்சவும்மை.

60. *கயற்கண்ணி வேற்படை கந்தர்க்கு நல்கிய கங்கணத்தி*
*மயல்செயும் மாரனைச் சாம்பர்செய் தார்முணம் மால்கொளவே*
*கயற்கண்ணி னாலேஅ டக்கித்தண் தாமரைக் காலடிக்கீழ்ச்*
*செயற்படச் சித்திரம் செய்நீலி யாம்எங்கள் தெய்வமன்றே.*

**குறிப்புரை:** மால்கொள = பெருமை கொள்ள. சித்திரம் = புகழ். கங்கணம் = விருது - சிறப்பு.

**பொழிப்புரை:** இவள் கெண்டைமீன்ஒத்த கண்களையுடையவள்; முருகனுக்கு வேலாயுதம் வழங்கிய சிறப்புக்குரியவள்; உலகை மயக்கும் மன்மதனை எரித்த சிவன் முன்னே அவர் பெருமை பெறத் தன் கயற்கண்ணால் அவரைத் தன்னுட்படுத்தி, தன் தண்ணிய திருவடிக்கீழ்ச் செயற்பட்டுப் புகழ்பெறச் செய்த கருநிறம் உடையவள், எங்கள் தெய்வமாகிய இவளல்லவா?

**விளக்கம்:** படைப்புத் தொடக்க நிலையில் பராபரன் பராபரையின் உள்ளத்தில் அடங்கியிருந்து ஐந்தொழில் புரிகின்றான். இதனை 'உடையாள் நடுவுள் நீ இருத்தி' என்கிறது திருவாசகம். இந்நூலாசிரியர், 'தண் தாமரைக் காலடிக்கீழ் செயற்படச் சித்திரம் செய் நீலி' என்றது, ஐந்தொழில் தொடங்கும் நிலை குறித்தது.

*61. அன்றே தடுத்(து)எனை ஆண்டுகொண் டாள்இனி அச்சமுண்டோ*
*குன்றே சரியினும் ஆழ்கடல் சீறினும் கோள்கள்நிலை*
*நின்றே திரியினும் நீள்பூதம் மோதினும் நின்அடிமை*
*என்றே இருக்கின்ற ஏழையேன் என்துயர் எய்துவதே.*

**குறிப்புரை:** நீள்பூதம் = மிகப்பெரிய ஐம்பூதங்கள்.

**பொழிப்புரை:** அம்மை என் இளமையிலேயே என்னைத் தடுத்தாட் கொண்டாள். எனவே எனக்கு இனி அச்சமென்பதே இல்லை. குன்று சரிந்து விழுந்தாலும், ஆழ்கடல் சீறி எழுந்தாலும், கோள்கள் தத்தம் நிலைகளில் திரிந்தாலும், மிகப்பெரிய ஐம்பூதங்களும் தம்முள் முரண்பட்டு மோதிக்கொண்டாலும், தாயே உனக்கு அடிமை என்றே வாழ்கின்ற அற்பனாகிய நான் ஏன் துயரப்பட வேண்டும்? துயரப்பட வேண்டியதில்லை.

**விளக்கம்:** மிகப்பெரிய இடங்களுக்கு அடிமைப்பட்டவர் பிறர்க்கு அஞ்ச வேண்டியதில்லை. அதுபோலச் சிவசங்கரிக்கு அடிமைப்பட்டவர் எந்நிலையிலும் அஞ்சவேண்டியதில்லை என்க. 'நாமார்க்கும் குடியல்லோம்' என்ற அப்பரடிகளை எண்ணுக.

*60. எய்தும் கமலத்தில் அன்பர்தம் நெஞ்சத்தில் ஏத்துகின்ற*
*மையார்ந்த கண்டனின் பாகத்தில் மாலின்நன் மார்பிடத்தில்*
*வையம் படைத்தோன் முகத்தில்கற் பால்உயர் மங்கைநல்லார்*
*கையில் கழுத்தில் முகத்தில் குடிகொளும் நேரிழையே.*

**குறிப்புரை:** கமலத்தில் = நீரில். கையில் கழுத்தில் முகத்தில் = கைகளில் வளையல், கழுத்தில் திரு(தாலி), முகத்தில் மஞ்சள் பூச்சு (இவைமங்கலக் குறியீடுகள்).

**பொழிப்புரை:** இவ்வம்மை நீரில் கங்கையாக, வணங்கும் அடியார் நெஞ்சில் தெய்வமாக, கறைக்கண்டனின் இடப்பாகத்தில் உமையவளாக, திருமாலின் மார்பில் திருமகளாக, நான்முகனின் நாவில் (முகத்தில்) கலைமகளாக, கற்பால் உயர்ந்த மங்கை நல்லாரின் கையில் வளையலாக, கழுத்தில் (திரு) தாலியாக, முகத்தில் மஞ்சள் பூச்சாக வந்தமைந்து குடிகொள்கிறாள்.

**விளக்கம்:** முகத்தில் - இடவாகுபெயர்.



*63. இழையொத்த நுண்ணிடை எம்பெரு மாட்டியை ஏத்தியன்றே*
*விழைகின்ற போகமும் ஆயுளும் பெற்றனர் விண்ணவர்தாம்*
*மழையொன்றும் காவினம் சூழும் தவத்துறை மாங்குயிற்கே*
*குழைகின்ற நன்மனங் காள்எது கேட்கினும் கூடுமன்றே.*

**குறிப்புரை:** மழை = மேகம். ஒன்றுகா = பொருந்திய சோலை. குழைகின்ற = உருகுகின்ற.

**பொழிப்புரை:** நூல் போன்ற நுண்ணிய இடையுடைய எம் தலைவியை வழிபட்டல்லவா தேவர்கள் தாம் விரும்பிய போகம், ஆயுள் ஆகியன பெற்றனர். எனவே மேகம் படியும் சோலைவகை சூழும் திருத்தவத்துறை உறையும் மாங்குயிலிடம் அவளருள் வேண்டி உருகும் நன்மனத்தவரே! நீர் எதுவேண்டினாலும் அது கைகூடும்.

**விளக்கம்:** மழை - காரியவாகுபெயர். மனங்காள் - தானியாகு பெயர்.

*64. கூடும்அண் டாண்டங்கள் செல்கின்ற சித்திகள் கூற்றைவென்று*
*நீடும்கற் பாந்தங்கள் நிற்கின்ற சித்திகள் நீள்கதிநேர்*
*ஓடும் கலைமதி ஒக்கஒன் றாகி உறங்கும்அன்பர்*
*சூடும் பதாம்புயத்(து) இன்புக்கு நேர்என்று சொல்லுவதே.*

**குறிப்புரை:** அண்டாண்டம் = அண்டங்கள் தோறும். கற்பம் = 432 கோடி ஆண்டு என்பர். நேர் ஓடும் = சிறந்த முறையில் இயங்கும். கலை= இடகலை பிங்கலை. மதி = மதித்து. ஒக்க = தம்முள் ஒத்த நிலையில் ஒன்றுபட்டு அமைய. உறங்கும் = யோக நிலையில் இருக்கும்.

**பொழிப்புரை:** சூழ்ந்துள்ள அண்டங்கள் தோறும் செல்கின்ற சித்திகள், யமனை வென்று மிக நீண்ட கற்பகாலங்கள் வாழும் சித்திகள் ஆகியன எல்லாம்; நீள்கதியில் சிறப்பாக இயங்கும் இடகலை பிங்கலையை மதித்து தம்முள் அவை ஒன்றுபட்டு அமைய யோக நிலையிலுள்ள அடியவர் தம்மனத்தில் உன் திருவடியைச் சூடும் இன்பத்துக்கு ஒப்பாகும் என்று கூற முடியுமா? ஒப்பாகாது என்க.

**விளக்கம்:** சொல்லுவதே - ஏகாரம் எதிர்மறையில் வந்தது.

65. சொல்லாய் பொருளாய் இருக்கின்ற நல்இளம் தோகைநல்லாள்
கல்லா தவரோடு கற்றவர் நெஞ்சத்தும் கைகுவித்து
நில்லா தவரோடு நிற்பவர் நெஞ்சத்தும் நீக்கமின்றி
வல்லாள் இருக்கின்ற வாஞ்சைக்கு மாறுஎன் வழங்குவதே.

**குறிப்புரை:** வல்லாள் = வல்லமையுடையவள். வாஞ்சை = விருப்பம். மாறு = கைம்மாறு.

**பொழிப்புரை:** சொல்லாக, அதன் பொருளாக இருக்கின்ற நல்ல இளமயில் ஆகிய இவள், கல்லாதவர், கற்றவர், தன்னைக் கைகூப்பி வணங்காதவர், வணங்குகின்றவர் ஆகிய அனைவர் உள்ளத்தும் நீக்கமின்றி நிற்கும் வல்லமையுடையவள். இவளது இவ்விருப்பத்துக்கு உலகம் கைம்மாறாக எதனை வழங்க முடியும்? எதுவும் ஈடாகாது அன்பைத்தவிர.

**விளக்கம்:** சொல்லாய் பொருளாய்....நல்லாள் - 'சொல்லும் பொருளும் என நடமாடும் துணைவருடன், புல்லும் பரிமளப் பூங்கொடியே' கல்லாதவரோடு கற்பவர் நெஞ்சத்தும்.... வாஞ்சை -

'கல்லார்க்கும் கற்றவர்க்கும் களிப்பருளும் களிப்பே
காணார்க்கும் கண்டவர்க்கும் கண்அளிக்கும் கண்ணே
வல்லார்க்கும் மாட்டார்க்கும் வரம்அளிக்கும் வரமே
மதியார்க்கும் மதிப்பவர்க்கும் மதிகொடுக்கும் மதியே
நல்லார்க்கும் பொல்லார்க்கும் நடுநின்ற நடுவே
நரர்களுக்கும் சுரர்களுக்கும் நலம்கொடுக்கும் நலமே
எல்லார்க்கும் பொதுவில் நடம் இடுகின்ற சிவமே
என்அரசே யான்புகலும் இசையும்அணிந் தருளே'

அப்பனோடு அம்மையாகிச் செறிவு ஒழியாது நிற்கின்றவளாதலின் அம்மைக்கும் இது ஒத்ததே.

66. வழங்கும் கருணைப் பெருந்திரு வாட்டியை வாள்நரம்பில்
அழலும் கதிரொடு தண்மதி தன்னில் அகல்விசும்பில்
வழங்கும் மழைதனில் ஆற்றினில் ஊற்றினில் வள்ளன்மையில்
வழங்கும் மழலையில் கண்டு எந்தன் கல்மனம் வாழ்கின்றதே.

**குறிப்புரை:** வாள்நரம்பில் = ஒளிபொருந்திய நரம்புக் கருவிகளில்.

**பொழிப்புரை:** உலகிற்குக் கருணை வழங்கும் பெருந்திருப் பிராட்டியை; என் கல்மனம்; நரம்புக்கருவிகளில், அகன்ற வானில் இயங்கும் ஒளிபொருந்திய வெப்பம் மிக்க ஞாயிற்றில், தண்ணிய



நிலவில், மேகத்தில், ஆற்றில், ஊற்றில், கொடைக்குணத்தில், மழலைப் பேச்சில் கண்டு வாழ்கின்றது.

**விளக்கம்:** நரம்பினில் - தானியாகுபெயர்.

67. வாழ்கஎன்று அன்னைமுன் காழிச் சிறுவற்கு வான்முலைப்பால்
சூழ்கின்ற நல்லன்பி னால்கறந்து ஈந்தனள் சொல்வதொண்ணா
ஆழ்கின்ற மாகடல் வாழ்கின்ற வையத்தில் அன்னையின்றி
வாழ்கின்ற நல்லுயிர் கண்ட துண் டோநின்று வாழ்த்துமினே.

**குறிப்புரை:** காழிச்சிறுவற்கு = திருஞான சம்பந்தருக்கு. வான் = மிகமேலான.

**பொழிப்புரை:** அன்னை இவள், சீர்காழிக் குழந்தையாகிய திருஞானசம்பந்தருக்கு மிகமேலான திருமுலைப்பாலைச் சூழும் தூய அன்பினால் பொற்கிண்ணத்தில் கறந்து வாழ்க என்று வாழ்த்தியளித்தாள். அளந்து கூறுதற்கரிய ஆழ்கடல் சூழ்ந்த இவ்வுலகில் இவளது அருளன்றி வாழ்கின்ற உயிரினைக் கண்டதில்லை. அருளும் இவளை வாழ்த்துங்கள்.

**விளக்கம்:** வாழ்கஎன்று.... ஈந்தாள் - 'வார்இணங்கு திருமுலைப்பால்வள்ளத்துக் கறந்தருளி, எண்அரிய சிவஞானத்து இன்னமுதம் குழைந்தருளி, உண் அடிசில் என ஊட்ட' - (பெரியபுராணம்). 1979, 1971).

68. வாழ்த்துங்கள் நாற்பத்து முக்கோண நாயகி வந்துநிற்கும்
தாழ்த்துங்கள் சென்னியைத் தாட்டா மரைக்கே சரண்புகுங்கோள்
பாழ்த்தமூ வாசைகள் பற்றுவிட்டு ஏகிடும் பற்றும்அன்பே
ஆழ்த்தும்பே ரானந்த வாரிகை காட்டும்எம் அம்பிகையே.

**குறிப்புரை:** தாள் +தாமரை = தாட்டாமரை - தாமரைத் திருவடி. வாரி = கடல்.

**பொழிப்புரை:** நாற்பத்து முக்கோணத் தலைவியாகிய இவளை வாழ்த்துங்கள்; உம் முன்வந்து தோன்றுவாள்; தலைதாழ்த்தி வணங்கி இவளது தாமரைத் திருவடிகளில் சரண்புகுங்கள். நம்மைப் பாழாக்கும் மூவாசைகளும் நம்மைப்பற்றியிருத்தலைக் கைவிட்டு வெளியேறும். இவ்வம்மை நாம் பற்றும் அன்பு காரணமாகப் பேரின்பக்கடலைக் காட்டி நம்மை அதில் திளைக்கச் செய்வாள்.

**விளக்கம்:** மூவாசை - மண், பொன், பெண் ஆசைகள் - தொகைக்குறிப்பு. வாரி - காரணப்பெயர். தாட்டாமரை - உருவகம்.

*69. அம்பிகை சூலி சிரோன்மணி ஆனந்தி ஆய்ச்சிமுக்கண்*
*நம்பன் இடத்தி அபிராமி நாரணி நான்மறைச்சி*
*அம்புவி காணமுன் பாண்டியன் தன்மகள் ஆகிவந்தாள்*
*செம்பவ ளத்திரு மேனியன் சேவடி சேர்விடமே.*

**குறிப்புரை:** அம்பிகை = தாய். சிரோன்மணி = தலைமணியாக உள்ளவள் - மிகமிக மேலானவள். ஆய்ச்சி = தலைவி. இடத்தி = இடப்பாகம்இருப்பவள். அபிராமி = பேரழகி. நாரணி = திருமாலாக விளங்குகின்றவள். நான்மறைச்சி = நான்குமறைகட்கும் உரிமையுடையவள். பாண்டியன் தன் மகள் = மலையத்துவச பாண்டியன் மகளான மீனாட்சியம்மை. சேர்வு + இடம் = சேர்விடம் = சேரும் இடம்.

**பொழிப்புரை:** தாய்; சூலம் ஏந்தியவள், மிகமிகமேலானவள், பேரின்ப வடிவினள், தலைவி, சிவபெருமானின் இடப்பாகம் இருப்பவள், பேரழகி, திருமாலாக விளங்குகின்றவள், நான்கு மறைகட்கும் உரிமை உடையவள், உலகவர் காண முன்நாளில் மலையத்துவ பாண்டியனுக்கு மகளாக வந்தவள் என்றெல்லாம் போற்றப்பெறும் இவள் சேரும் இடம், செம்மையான பவளம் போன்ற திருமேனியுடைய சிவபிரானின் திருவடியாகும்.

**விளக்கம்:** நாரணி - 'போராழி சங்கு அங்கை ஏந்தும் பிராட்டி நீ' - (பெருந்திருப்....பி.த.108;4) பாண்டியன் மகள் - 'மலையத்துவசன் வளர்த்த பசுங்கிளி' - (மீ.பி.த.தால்9,10) சேர்வு இடம் - திருவடி - 'திருவடியேசிவம் ஆவது தேரில், திருவடி யே சிவலோகம் சிந்திக்கில், திருவடி யேசெல் கதியது செப்பில், திருவடி யேதஞ்சம் உள்தெளி வார்க்கே' - திருமந்தி.136

பெருமானை விட பெருமாட்டி சிறந்தவள் - 'நின்னிற் சிறந்தநின் தாளிணையவை '- பரிபாடல். பெருமானின் திருவடியை அம்மையாகக் கூறுவது மரபு.

சேர்விடம் என்பதற்கு நாம் சேரவேண்டிய இடம் எனினும் ஒக்கும்.



*70. இடமாக எந்தைதன் பங்கிருந் தாள்அவள் எங்கெங்குமே*
*நடமாடு கின்றன அல்லன எல்லாமும் நான்என்கிறாள்*
*படமாடு பாம்பினை ஆழியாக் கொண்ட பராசத்தியே*
*குடமாடு கூத்தனின் தங்கைநம் கோலக் குமரியன்றே.*

**குறிப்புரை:** நடமாடுகின்றன, அல்லன = இயங்குதிணை நிலைத்திணை. (எ-டு) முறையே மனிதன், விலங்கு, பறவை, புல், செடி, மரம். ஆழி = மோதிரம். குடம் = குடக்கூத்து. கூத்தன் = கண்ணபிரான்.

**பொழிப்புரை:** நம் சிவபிரானின் இடப்பாகம் உள்ள இவள் எல்லா விடங்களிலும் உள்ள இயங்குதிணை நிலைத்திணை ஆகிய எல்லாமே நான் என்கின்றாள்; படமெடுத்தாடும் பாம்பினைத் தன் விரலில் மோதிரமாகக் கொண்ட இப்பராசத்தி. குடக்கூத்தாடிய கண்ணபிரானின் தங்கையாகிய அழகிய குமரியல்லவா!

**விளக்கம்:** குடக்கூத்து - குரவை, கலி நடம், குடம், கரணம், நோக்கு, தோற்பாவை என்ற வினோதக் கூத்துள் ஒன்று. நடமாடுகின்றன அல்லன... என்கின்றாள் - 'சகலமும் நின்திருச் சொரூபம்' (மீ.பி.த.நீராடல்3 : 2).

*71. குமரிநும் கன்னிகை கோமளை யாமளை கூர்விழிச்சி*
*சமரவெங் கூற்றினைத் தாளால் உதைத்தவள் தாக்கணங்காம்*
*அமரர்தம் வாழ்விற்கு முப்புரம் செற்றவள் ஆறுதலைக்*
*குமரனை ஈன்(று)அந்தச் சூரனை வாழ்வித்த கோமளமே.*

**குறிப்புரை:** கோமளை - என்றும் இளையவள். யாமளை = பார்வதி தேவி. சமரவெங்கூற்று = கொடிய போர்வல்ல காலன். தாக்கணங்கு = திருமகள். செற்றவள் = அழித்தவள். கோமளம் = அழகு.

**பொழிப்புரை:** ஆறு திருமுகத்தனான அருள்தரு சண்முகநாதப் பெருமானைத் தந்ததன் மூலம் அந்தச் சூரபதுமனைச் சேவலாகவும் மயிலாகவும் வாழ்வித்தவள் இந்த அழகி; குமரி; என்றும் இளையவள்; பார்வதி தேவி; கூர்மையான அருட் கண்நோக்குடையவள்; கொடிய போரிடும் காலனை மார்க்கண்டேயர்க்காகக் காலால் உதைத்தவள்; திருமகள்; தேவர்களின் நல்வாழ்வுக்காக முப்புரங்களையும் அழித்த அழகியாவாள்.

**விளக்கம்:** குமரன் தோன்றக் காரணமானவள் - 'தவப்பெருமாற்குத் தடக்கையும் செம்முகனும் முந்நான்கு இருமூன்று எனத் தோன்றிய மூதறிவின் மகனும் உண்டாயதன்றோவல்லி நீ செய்த வல்லபமே' (அபி.அந்.65) கூற்றினை உதைத்தவள் - 'வாமச்சேவடி தன்னால் சிறிது உந்தி உதைத்தான் கூற்றன் விண் முகில்போல் மண்ணுற வீழ்ந்தனனே' - (கந்தபுரா.மார்க்கண்.253)

*72. கோமள மென்கொடி கோதற்ற மாங்குயில் குன்(று)அடுத்த*
*பாமழப் பைங்கிளி யாவரும் தேர்கிலா ஆதிவித்து*
*மாமழ வப்பெரு மன்னவன் உட்கொள்ம ருந்தாம்அன்பர்*
*தோமறு சிந்தையுள் தூண்டா விளக்(கு) எங்கள் சுந்தரமே.*

**குறிப்புரை:** குன்று அடுத்த - அடுத்த குன்று = இமயமலையை அடுத்த குன்றில். பா = அழகிய. மழ = இளைய. உட்கொண்ட = மனத்தில் ஏந்திய. தோம் அறு = குற்றமற்ற. சுந்தரம் = திரு.

**பொழிப்புரை:** எங்கள் திரு, அழகிய மென்கொடி; குற்றமற்ற மாங்குயில்; இமயமலையை அடுத்த குன்றில் தோன்றிய அழகிய இளைய பைங்கிளி; திருமால் முதலிய யாராலும் அறிதற்கியலாத ஆதிவித்து; சிறந்த மழவமன்னன் தன்வெண்குட்ட நோய்தீரத் தன்மனத்தில் கொண்ட மருந்து. அடியவர் மனத்துத் தூண்டா விளக்கு ஆவாள்.

**விளக்கம் :** மழவமன்னன்.... மருந்து - தன் ஆசானின் மனையாளைப் புணர்ந்த பாவத்தால் மழவ மன்னன் வெண்குட்டமுற்றான். தலயாத்திரைகளில் தீராத அது, இங்குள்ள சிவகங்கையில் நீராடி அம்மையையும் அப்பனையும் வழிபட்டு, தீரப்பெற்றான் என்பது தலபுராணச் செய்தி.

'மக்கட்பு ரோகிதன் மனைக்கற்பு அழித்துமழ
வன்பெற்ற வெண்குட்ட நோய்
மாற்றஉல(கு) எங்கும் திரிந்துஇத் தலத்துவர
மாற்றிச் சிறப்பும்உதவி'

- பெருந்திரு.பி.த.அம்புலி6:1

என்பது தி.மீ.சு. பிள்ளையவர்கள் வாக்கு.

*73. சுந்தரி செம்பட்(டு) உடைகொண்ட செந்திரு துன்புகெட*
*வந்தித்த தேவர்முன் பாற்கடல் தன்னில்முன் வந்துநின்றாள்*
*சிந்துரம் தீட்டிய நன்னுதல் சிற்றிடைச் செங்கரும்பு*
*பந்(து)இணைக் கொங்கையள் பாண்டிநன் நாடுடைப் பைங்கிளியே.*



**குறிப்புரை:** செந்திரு = திருமகள். பந்து இணை = இருபந்துகள்.

**பொழிப்புரை:** அழகி; செம்பட்டாடை உடுத்த திருமகள்; தம் துன்பம் தீரும் பொருட்டு வணங்கிய தேவர்கள் காணப் பாற்கடலில் தோன்றியவள்; செந்நிறப்பொட்டிட்ட அழகிய நெற்றியுடன் சிற்றிடையும் கொண்ட செங்கரும்பாவாள்; இருபந்துகள் ஒத்த கொங்கைகளை யுடையவள்; பாண்டி நன் நாட்டினை ஆட்சிபுரிந்த பைங்கிளி இவளாவாள்.

**விளக்கம்:** பாண்டியநாட்டு அரசி - 'செங்கோல் திருத்திய முடிச்செழியர்கோமகள்' - (மீனா.பி.த.முத்தப் 8).

*74. பாண்டிநன் நாட்டினை ஆண்டவள் பைந்தமிழ்ப் பாட்டினுக்கே*
*ஆண்(டு)ஒரு வெண்முத்து மாலையைச் சூட்டிஅன்(று)*
*ஆட்கொண்டவள்*
*தாண்டவன் பாட்டுக்குத் தான்படிக் கா(சு)அருள் தையல்நல்லாள்*
*வேண்டும் வரம்தரு மென்கம லாலய மெல்லணங்கே.*

**குறிப்புரை:** வெண்முத்து மாலையைச் சூட்டியது - ஸ்ரீ குமரகுருபரரின் மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ், மதுரையில் நாயக்கர் அரசவையில் அரங்கேறியபோது அம்மை சிறுமியாக வந்து அரசன் மடியில் இருந்து கேட்டுவந்தபோது உவந்து முத்துமாலை சூட்டினாள் அடிகளுக்கு. தாண்டவன் = தாண்டகவேந்தர் ஆகிய அப்பரடிகள். இவரது பாடல் கேட்கத் 'திருவீழிமிழலையில் வாசியில்லாப் பொற்காசு அருளினாள்' பஞ்சக் கொடுமை தீர்க்க. பாண்டியநாட்டு அரசி 'மதுரைத் தலைவி' (மீ.பி.த.பொன்னூ.7) 'மதுரைத் துரைமகள்' - (மீ.பி.த.நீராடல் 10) 'பொருநைத்துறையொடு குமரித் துறையவள்' (மீ.பி.த.நீராடல் 9,10).

*75. அணங்குகா பாலி வராகிவெஞ் சூலியாம் அம்பரைச்சி*
*பிணங்கும் பயிரவி மோடிவெங் காளி பிடாரியம்மை*
*வணங்கும் திரிபுரை வாணி வரைமகள் வஞ்சகரைப்*
*பிணங்கண்டு வெஞ்சமர் மேற்கொள் பவானிநம் பெண்பிள்ளையே*

**குறிப்புரை:** அணங்கு = பராசத்தி. அம்பரைச்சி - அழகிய மேலானவள். (பரன் - பரை - பரைச்சி). பிணங்கும் = போரிடும்.

**பொழிப்புரை:** நம் அன்னை பராசத்தி; பிரமகபாலம் ஏந்தியவள்; வராகி; கொடிய சூலம் ஏந்தியவள்; அழகிய மேலானவள்; போரிடும்

பைரவி; மோடி; கொடிய காளி; பிடாரி; அனைவரும் வணங்கும் திரிபுரை ; கலைமகள்; மலை மகள்; வஞ்சகரை அழிக்கக் கொடிய போர்புரியும் பவானி என்ற அனைத்துச் சத்திகளுமாவாள்.

**விளக்கம்:** சத்திகள் எல்லாம் இவளே.

'பைரவி பஞ்சமி பாசாங்கு சைபஞ்ச பாணிவஞ்சர்
உயிரவி உண்ணும் உயர்சண்டிகாளி ஒளிரும்கலா
வயிரவி மண்டலி மாலினி சூலி வராகி என்றே
செயிர்அவி நான்மறை சேர்திரு நாமங்கள் செப்புவரே'.
- அபி.அந்த.77

76. பெண்பிள்ளை யாம்அவள் நான்மறை பேசிடக் கூசுகின்ற
பெண்பிள்ளை யாம்அவள் தண்டமிழ்த் தீஞ்சுவைப் பித்துண்டவள்
பெண்பிள்ளை யாவையும் பெற்றவள் ஈசனைப் பேதுறுத்திப்
பெண்பிள்ளை போல்நுதல் கண்ணினைச் செய்தபே ரானந்தியே.

**குறிப்புரை:** பெண்பிள்ளை யாவையும் பெற்றவள் - இறைவன் ஒருவனே ஆண்மகன், உயிர்கள் அனைத்தும் பெண்ணே என்பது சைவசித்தாந்த மரபு. எனவே இங்கு உயிர்க்குலத்தைப் பெண்பிள்ளையாவையும் என்றார். கூசுகின்ற = இயலாமையால் நாணும். பேதுறுத்தி = மாறுபடுத்தி.

**பொழிப்புரை:** நால்வேதங்களும் இவளை முற்றாகப் புகழ்ந்து கூற இயலாமையால் நாணும்; தண்டமிழ்த் தீஞ்சுவை நுகர்வதில் பித்தம் பிடித்தவள்; உயிர்க்குலம் அனைத்தையும் பெற்றெடுத்தவள்; சிவபெருமானின் நுதற்கண் ஆற்றலை அருட்கண்ணாகச் செய்த பேரின்ப வடிவினள்.

**விளக்கம்:** 'தமரநீர்ப் புவனம் முழுது ஒருங்கு ஈன்றாள் தடாதகா தேவி என்று ஒரு பேர் பெற்றதும்.... தண்டமிழ் அமுதம் கூட்டுண எழுந்த வேட்கையால் எனில் இக்கொழிதமிழ்ப்பெருமையாரறிவார்' - மதுரைக்கலம்பகம்.

இச்செய்யுள் சொற்பொருள் பின்வருநிலையணி.

70. ஆனந்த வெள்ளம் அமரர்தம் வாழ்வும்ஆம் யார்க்கும் எட்டாத்
தேனுமாம் முக்கனித் தீஞ்சுவை தானுமாம் செங்கரும்பாம்
மோனம் தவிர்த்(து)அந்த முக்கண் முனிக்(கு) ஆவல் மூட்டிக்கயல்
மீன்ஒத்த கண்கொண்டு வேள்கொடி மேல்கட்டும் மென்குயிலே.



**குறிப்புரை:** முக்கண் முனி = சிவபிரான். வேள்கொடி = மன்மதனின் மீனக் கொடி. இதுவே பாண்டியர் கொடியுமாகும். மேல் கட்டும் = உயர்த்தும்.

**பொழிப்புரை:** ஆனந்த வெள்ளமாய், தேவர்கள் நல்வாழ்வாய் யார்க்கும் எட்டாத கொம்புத்தேனாய், முக்கனிகளின் இனிய சுவையாய், செங்கரும்பாய் உள்ளவள். இவள் முக்கண் முனியர்கிய சிவபிரானுக்குத் தன் கயல்கண்களால் ஆசை மூட்டி - மணந்து - தனது ஆட்சி குறிக்கும். மீன்கொடியை உயர்த்திக் கட்டிய மென்குயிலாவாள்.

**விளக்கம்:** மீனாட்சியம்மையாய்த் திக்குவிசயம் செய்தபோது சிவனுடன் மோத முற்படுநிலையில் வெட்கித் தலைகுனிந்து அவனை மணந்து தன் மீன்கொடி உயர்த்தினாள்.

'சிவனைப் பொருத சமர்த்தன் உகந்துள சேல்போல் மாயாமே
மகரத் துவசம் உயர்த்த பொலன் கொடி' - (மீ.பி.த.தால் : 10)

78. குயிலாகி வாய்விட்டுக் கூவிச் சுகம்செயும் கோதில்வியன்
மயிலாகி மன்றில் நடிக்கும்அம் மூலத்து வாழ்சர்ப்பமாய்
ஒயிலாய் படுத்(து) அங்(கு) உறங்கிக் கிடக்கும்ஒண் யோகியர்க்கு
வெயிலாய் விரிந்(து)எங்கும் ஆனந்த வெள்ளமாம் மெல்லியலே.

**குறிப்புரை:** வியன்மன்றில் = அகன்ற அம்பலத்தில். மூலம் = மூலாதாரம். அம்சர்ப்பம் = மூலச்சுடர். இது பாம்புபோல் சுருண்டு கிடக்கும் குண்டலி. வெயில் = ஒளி.

**பொழிப்புரை:** இம்மெல்லியல் குயிலாக இருந்து வாய்விட்டுக் கூவிச் சுகம்தரும்; குற்றமற்ற அகன்ற அம்பலத்தில் நடிக்கும்; யோகியர்க்கு மூலாதாரத்தில் ஒளிவடிவாய்ப் பாம்புபோல் சுருண்டு குண்டலியாகக் கிடக்கும். யோகியர்க்கு அவ்வொளியே உடல் எங்கும் ஆனந்த வெள்ளமாய்ப் பரவி நிற்கும்.

**விளக்கம்:** இதில் யோகியர்க்கு என்பது சிங்க நோக்குடையது. மூலாதாரம் : உந்திக்குக் கீழே 12'' 'தொலைவில் உள்ளது. நாபிக்குக் கீழே பன்னிரண்டுங்குலம்' - (திருமந்.572) குண்டலி சத்தி : 'மூலத்து இருவிரல் மேலுக்கு முன்நின்ற பாலித்த யோனிக்கு இருவிரல் கீழ்நின்ற கோலித்த குண்டலி' - (திருமந்.573)

(கோலித்த = வட்டமாய்ச் சுருண்ட)

79. மெல்லியல் நுண்ணிடை வித்தகி ஏடங்கை மேற்கொண்டவள்
மெல்லிய செம்பட்டு உடையார்ந்த மேகலை மின்னரிக்கும்
மெல்லிய வெண்முத்தின் ஆரம்சு மந்(து)இரு மேருஒத்த
மெல்லிய காற்றென வேதாந்த வல்லிஎம் மெய்த்திருவே.

**குறிப்புரை:** வித்தகி = ஞான வடிவினள். ஒத்த = பொருந்திய. வேதாந்தம் = உபநிடதம்.

**பொழிப்புரை:** நுண்ணிடையுடைய இவள் சாத்துவிக இயல்புடைய ஞானவடிவினள். ஏட்டுச் சுவடி ஏந்திய கலைமகள், இவளது மென்மையான செம்மைநிறப்பட்டுடைமேல் கட்டிய மேகலை ஒளிவீசும்; மென்மையான வெண்நிறத்து முத்துமாலையைச் சுமந்த இரு மேருமலைகளாக இவளது கொங்கைகள் விளங்கும். பொருந்திய தென்றல் காற்றாக விளங்கும் உபநிடதக்கொடியாகிய இவள் எம் மெய்த்திரு ஆவாள்.

**விளக்கம்:** ஞான வடிவினளான உமையவள், ஏடங்கை கொண்ட கலைமகள், மெய்த்திருவாகிய திருமகள் ஆகிய மூவரும் இவளே என்றார்.

80. திருவே பிரிந்ததன் தெய்வநன் மார்பினைச் சேரஎன்று
திருவே அந் நற்றவம் ஆற்றித் துதித்திடச் சிந்தைகண்டு
திருவேய்ந்த மாலுடன் பொன்னிக்கு நன்மணம் சேர்த்துவைக்கும்
திருவார்தவத்துறைத் தெய்வம்உண்டு என்னைச் சிறப்பிக்கவே.

**குறிப்புரை:** வேய் = பொருந்திய. பொன்னி = திருமகள்.

**பொழிப்புரை:** தான்பிரிந்த தன்கணவனது அழகிய நன்மார்பினை மீண்டும் சேரவேண்டித் திருமகள், தெய்வத்தன்மை பொருந்திய தவத்தை இடைவிடாது செய்து துதித்ததை எண்ணி, விரும்பும் தன்மையுடைய திருமாலுடன் திருமகளுக்குத் திருமணம் செய்து சேர்த்து வைக்கும் மேன்மை மிக்க திருத்தவத்துறையுறை தெய்வம் - இவ்வன்னை - என்னைச் சிறப்பிக்க உண்டு.

81. சிறப்பிக்கும் நான்மறை தேரறி யாது திகைத்துநிற்க
மறப்பிக்கும் யோகியர் தானவர் வானவர் மற்றையர்க்கும்
சுறப்பிக்கும் பன்னிரு சூத்திர வண்ணமாய்த் தோன்றிநிற்கும்
நிறப்பிக்கும் தண்டமிழ் ஐந்திணை யாய்ப்பண்டு நின்றவளே.



**குறிப்புரை:** தேர் அறியாது = ஆராய்ந்தறிய இயலாமல். மறப்பிக்கும் = தன்னை மறக்கச் செய்யும். சுறப்பிக்கும் = கருத்துகளை ஊறச் செய்யும். நிறப்பிக்கும் = சீர்படச் செய்யும். ஐந்திணை = அகன் ஐந்திணை. பன்னிரு சூத்திரம்= பன்னிரண்டே சூத்திரங்களைக் கொண்ட சிவஞானபோதம்.

**பொழிப்புரை :** தன்னைச் சிறப்பிக்கின்ற நால்வகை வேதங்களும் முற்றாக அறிவதற்கும் ஆராய்தற்கும் இயலாது திகைத்து நிற்கவும், தன்னையே மறக்கச் செய்யும் யோகநிலையில் உள்ள யோகியர், உலக அடியவர், தேவர் மற்றும் அனைவர்க்கும் உயர்ந்த கருத்துகளை நினைக்குந்தோறும் அவற்றை ஊற்றெடுக்கச் செய்யும் பன்னிரு சின்னஞ் சிறிய சூத்திரவடிவமாக விளங்கி நம்வாழ்வைச் சீர்படச் செய்யும் சிவஞான போதத் தண்டமிழ் நூலாகவும், அகன் ஐந்திணையாகவும் பண்டுமுதல் நிற்கின்றவள் இவள்.

**விளக்கம்:** நான்மறை திகைத்தல் - 'வேதங்கள் ஐயா என, ஓங்கி ஆழ்ந்து அகன்ற நுண்ணியனே' - சிவபுராணம். வேதங்கட்குப் பரம்பொருள் அகப்படாமைக்குக் காரணம் அவை பசுஞானமே என்பது ச.த.தேசிகர் முதலிய பேரறிஞர் முடிபு. பன்னிரு சூத்திரம் - சிவஞான போதம். ஆசிரியர் மெய்கண்டார். இதுமொழிபெயர்ப்பன்று. தமிழ்நூலே என்பதை நிறப்பிக்கும் தண்டமிழ் என்பதால் அறிவித்தார். ஐந்திணையாவது அன்புடைக்காமம். அவை குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என்பனவும் இவற்றின் உரிப்பொருளாகிய புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் என்பனவும் இவற்றின் நிமித்தமும் ஆகும்.

82. பண்டுஏழ் முனிவர்க்கு நல்லருள் பாலித்த பாக்கியத்தை
கண்டே நிகர்மொழிச் சம்பந்தன் உள்நின்ற கற்பகத்தை
வண்தேன் எனமறை வாய்விட்ட ரீங்கார வாஞ்சியத்தைக்
கண்டேன் தவத்துறைக் காவிடத் தேதவம் கைவந்ததே.

**குறிப்புரை:** ஏழ்முனிவர் = அந்திரி, பிருகு, கவுதமர், ஆங்கிரசு, வசிட்டர், புலத்தியர், மரீசு என்பவர்கள். வாய்விட்ட = கூவியழைத்த. வாஞ்சியம் = விரும்பத்தக்கவள்

**பொழிப்புரை:** அத்திரி முதலிய ஏழு முனிவர்கட்குப் பண்டு நல்லருள் பாலித்த செல்வமானவளை, கற்கண்டு ஒத்த சொற்களால் பாடிப்பரவிய திருஞான சம்பந்தர் உள்ளத்தில் நிலைத்த கற்பகமாய்

விளங்குகின்றவளை, வளமான தேனாகக் கருதி வண்டுகளாக வாய்விட்டு மறைகள் அழைத்த விரும்பத்தக்கவளை, திருத்தவத்துறைச் சோலையில் கண்டுகொண்டேன்; என் தவம் பலித்தது.

**விளக்கம்:** ஏழ்முனிவர்க்கு அருளியது

'தவத்துறை ஏழ் இருடியர்க்கு இறைஇடத்தின் அமர் சத்தியை'
- (பெருந்..பி.த.பா.22:3).

83. *கைவந்த ஞானக் கடல்முகட் டேஇளங் காலைதன்னில்*
*சைவம் தழைத்திடத் தன்முனம் தோன்றித் தமிழ்விரித்த*
*மெய்வந்த ஞானக் குரவர்கள் சேர்ந்துசே மித்துவைத்த*
*தெய்வம் தவத்துறைத் தேவிஉண் டேமயல் தீர்வதற்கே.*

**குறிப்புரை:** கைவந்த = அனுபவத்தில் வந்த. கடல் ஞானம் என்று கூட்டுக. இளம் காலை = இளம் பருவம். முனம் தோன்றித் தன் இளம்காலை தன்னில் சைவம் தழைத்திடத் தமிழ் விரித்த மெய்வந்த ஞானக் குரவர் என்று கூட்டுக.

**பொழிப்புரை:** முற்காலத்தில் தோன்றித் தம் இளம் பருவத்திலேயே - அனுபவத்தில் வந்த கடல்போன்ற ஞானத்தின் சிகரமாக விளங்கிச் சைவ சமயம் செழிக்கத் திருமுறைகளையும் சாத்திரங்களையும் அருளிய சமய குரவர்கள், சந்தான குரவர்கள் ஆகியோர் சேர்த்துச் சேமித்து வைத்த தவத்துறைத் தேவியாகிய தெய்வம், நம் மயக்கம் தீர்வதற்கு உள்ளாள். இவளை வணங்கி நம் மயக்கம் தீர்வோம்.

**விளக்கம்:** சமய குரவர்கள் - திருஞானசம்பந்தர், அப்பரடிகள், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகியோர். சந்தான குரவர்கள் - மெய்கண்டசிவம், அருள்நந்திசிவம், மறைஞான சிவம், உமாபதி சிவம் ஆகியோர்.

கடல் ஞானம் - உவமைத் தொகை.

84. *கேட்கின்றது ஏதுக்குத் தாய்அறிந்(து) ஏதும்நான் கேட்கின்றிலேன்*
*ஆட்கொண்ட மெல்லடி ஆரண நூபுர அஞ்சுகத்தை*
*வாட்டடம் கண்கொண்ட மாமலைக் கன்னியை வாழ்த்துகிறேன்*
*பாட்டதே என்பரி(சு) ஏற்ப(து) அவள்பொற் பதாம்புயமே.*

**குறிப்புரை:** ஆரண நூபுரம் = மறைச்சிலம்பு. வாள்தடங்கண் = ஒளிபொருந்திய அகன்ற கண். பாட்டதே = பாட்டு மட்டும்.



**பொழிப்புரை:** என்னை அடிமையாகக் கொண்டவள் ஆகிய மறைச்சிலம்பணிந்த கிளி ஒத்தவளும், ஒளிபொருந்திய அகன்ற கண்களையுடையவளுமாகிய சிறந்த மலைமகளை நான் வாழ்த்துகிறேன். இவ்வாழ்த்தில் பாடல் மட்டுமே அவளுக்கு நான் வழங்கும் பரிசு. அதனை ஏற்பது அவளது அழகிய தாமரைத் திருவடிகளே ஆகும். நான் அவளை வேண்டுவது எற்றுக்கு; அவளறிய நான் யாதொன்றும் அவளைக் கேட்கவில்லை; ஆயினும் அவளே அனைத்தும் அருள்வாள்.

85. *பதாம்புய மேபொருள் ஆவ(து)இப் பாட்டுக்கும் நான்மறைக்கும்*
*பதாம்புய மேஅந்த வீடுஎன அன்பர்கள் பாடுகின்றார்*
*பதாம்புய மேஅருள் பாலிக்கும் அன்பர்க்குப் பக்குவத்தால்*
*பதாம்புய மேதமிழ்ப் பாவலர் சேமித்த பாக்கியமே.*

**குறிப்புரை :** பாக்கியம் = செல்வம்.

**பொழிப்புரை :** திருவடித் தாமரையே என் நூலுக்கும் நான்கு மறைகட்கும் உரிய பொருள்; அதுவே அனைவரும் குறிப்பிடும் வீடுபேறு என்று அன்பர்கள் பாடுவர்; அதுவே பக்குவப்பட்ட அன்பர்கட்கு அருள்பாலிக்கும்; அதுவே தமிழ்ப்பாவலர் அனைவரும் ஒருசேரச் சேமித்துவைத்த செல்வம் ஆகும்.

**விளக்கம் :** திருவடிச்சிறப்பு

திருவடி ஞானம் சிவம்ஆக்கு விக்கும்
திருவடி ஞானம் சிவலோகம் சேர்க்கும்
திருவடி ஞானம் சிறைமலம் நீக்கும்
திருவடி ஞானம் திண்சித்தி முத்தியே!

- திருமந்திரம் 1582

இச்செய்யுள் சொற்பொருள் பின்வருநிலையணி.

86. *பாக்கியம் காண்எங்கள் பண்டிதர் முன்சொன்ன பக்குவம்சேர்*
*வாக்கியம் காண்அந்தக் கல்லாலின் கீழ்அரன் வாழவென்று*
*தூக்கிய முத்திரைத் தன்பொருள் காண்கத சத்துவம்காண்*
*போக்கியம் செந்தமிழ் நாட்டுக்கும் யார்க்கும் புகலிடமே.*

**குறிப்புரை :** பண்டிதர் = அறிஞர் - ஞானியர். அரன் = ஆலமர்செல்வன் - தட்சிணாமூர்த்தி. வாழ - உயிர்கள் வீடுபேற்றில் வாழ. தூக்கிய = காட்டியருளிய. த = பிரமம். சத்துவம் = சாரம்.

**பொழிப்புரை:** ஞானமயன் ஆகிய எங்கள் சிவபெருமான், முன்பு உபதேசித்த பக்குவமான சொல்லே எம்பெருஞ்செல்வம். அதுவே கல்லால் நிழல்கீழ் சிவபிரான் எழுந்தருளி உயிர்க்குலம் ஈடேற்றம் பெற்று வீடுபேற்றில் வாழத் தமது வலதுகை தூக்கிக் காட்டி உணர்த்திய சின்முத்திரையாம் ஞானமுத்திரை; அதுவே பிரமத்தின் சாரம்; அதுவே நம் செந்தமிழ் நாட்டவர்க்கு மட்டுமன்றி அனைத்துலகவர்களும் அடைக்கலம் புகுமிடம் ஆகும்.

**விளக்கம்:** கல்லால் நிழலில் சிவபெருமான் எழுந்தருளி; நான்முகனின் மானச மக்கள் ஆகிய சனகர், சனாதனர், சனற்குமாரர், சனந்தனர் ஆகிய நால்வருக்கும் 'சொல்லாமல் சொன்ன' உபதேசம் சின்முத்திரை. இது ஞான முத்திரை எனப்படும். வலக்கையை உயர்த்தி அதன் பெருவிரல் அடியில் சுட்டுவிரல் நுனி பொருந்தியிருக்க, பிற மூவிரல்களும் சுட்டுவிரலிலிருந்து விலகி நிற்பது. விலகியிருக்கும் நடுவிரல், மோதிரவிரல், சுண்டுவிரல் ஆகியன முறையே ஆணவம் கன்மம், மாயை ஆகியவற்றின் குறியீடுகள். சுட்டுவிரல் ஆன்மா. கட்டைவிரல் இறை. இவை பொருந்தியிருக்கும் நிலையைத் 'தாடலை' (திருவருட்பயன்.74) என்பது மரபு. பெருமான் திருவடியில் ஆன்மாவின் தலை பொருந்தியிருத்தல் வேண்டும் என்பது இதன் குறியீடு. இம்முறைக்கு மாறாகப் பெருவிரல் நுனியுடன் சுட்டுவிரல் நுனி பொருந்தக் காட்டுவது - பொடிவாங்குவது போல் காட்டுவது பெரும் பிழை.

87. *புகலிடம் ஆவது போக்கற்(று) இருப்பது போதம் முற்றி*
*அகலிட மாய்விரிந்(து) அண்டாண்டம் யாவும் அகப்படுத்தி*
*மிகல்ஒன்றும் இன்றி வெளிநிறை ஆனந்த வெள்ளத்தையே*
*புகலிட மாய்க்கொண்டு போற்றுகின் றேன்அவள் போதிக்கவே.*

**குறிப்புரை:** போக்கற்று = அடைக்கலம் புகுமிடம் வேறின்றி. மிகல் = தருக்கு. வெளிநிறை ஆனந்த வெள்ளம் = பரவெளியில் நிறைந்த பேரின்பப் பெருக்கு. போதிக்க = உபதேசிக்க.

**பொழிப்புரை:** நான் அடைக்கலம் புகுமிடம் என்று வேறொன்று இல்லை. அது அன்னையின் திருவடியேயாகும். இதனால் ஞானம் முதிர, அகன்று விரிந்து பரந்துள்ள அண்டங்களை எல்லாம் தன்னுள் அகப்படுத்திய பரவெளியில் நிறைந்துள்ள பேரின்பப் பெருக்கை நான்



என் புகலிடமாகக் கொள்ளவும். தருக்குச் சிறிதும் இல்லாத எனக்கு அங்கு அன்னை உபதேசிக்கவும் அவளையே போற்றுகின்றேன்.

88. *போதித்த சற்குரு தாய்தந்தை தெய்வமும் போற்றுதமிழ்*
*சாதித்த நான்மறை தான்முதல் சொன்னதும் சங்கத்துமுன்*
*வாதித்துக் கொண்டான் உயிர்கொண்டு பின்அங்கு வாழ்வித்(து)உயர்*
*ஆதித்தன் போல்எழுந்(து) ஆண்டதும் அவ்வெள்ளை அன்னமன்றே*

**குறிப்புரை:** முதல் = முதன்மையானது. சாதித்த = நிறுவிய.

**பொழிப்புரை:** உபதேசித்த சற்குருநாதர், தாய், தந்தை, தெய்வம், மற்றும் பிறர் வாழ்வுகளில் இனிமை சாதித்து நிறுவித் தமிழின் உயர்வினைக் காட்டியது, நால்வர் பெருமக்கள் அருளிய திருமுறை. முன்நாளில் தமிழ்ச்சங்கத்தில் 'ஆரியம் நன்று தமிழ் தீது' என்று விவாதம் செய்து இறந்துபட்ட குயக்கொண்டான் என்பவனை எழுப்பி வாழ்வித்ததில் கலைவாணியாகிய இவ்வன்னையின் பேரருளே முதன்மையானது அல்லவா?

**விளக்கம்:** வடமொழியில் பிறரைச் சாகடிக்கும் மந்திரங்கள் - மாரண மந்திரங்கள், பிறரைக் கொல்லும் அபிசாரவேள்வி முதலியன உண்டு. ஆனால் மன்னிய இத்தமிழ்க்கிளவி மந்திரங்கள் வாழ்வித்த வரலாறே உண்டு. எனவே 'தமிழ் சாதித்த நான்மறை' என்கிறார். தமிழ் - இனிமை.

ஆரியம் நன்று தமிழ்தீது என்று விவாதித்த குயக்கொண்டான் வீழ்ந்தது பற்றிய பழம்பாடல்.

'முரணில் பொதியின் முதற்புத்தேள் வாழி
பரண கபிலரும் வாழி - அரணிலா
ஆனந்த வேட்கையான் வேட்கோக் குயக்கொண்டான்
ஆனந்தம் சேர்கசுவா கா.'

என்பது. தமிழ்ச்சங்கத்தார் அவன்மீது இரங்கி எழுப்பிய பழம் பாடல் :

ஆரியம் நன்று தமிழ் தீதென வுரைத்த
காரியத்தால் காலக்கோட் பட்டானைச் - சீரிய
அந்தண் பொதியில் அகத்தியனார் ஆணையினால்
செந்தமிழே தீர்க்கசுவா கா.

என்பது. குயக்கொண்டான், ஆரியரால் தூண்டிவிடப்பட்ட தமிழன்

என்பது பெயராலேயே விளங்கும் என்பர். - (பாவாணர் மொழி வரலாறு பக். 66, 67)

*89. அன்னமாய் உச்சிக் கமலத்து வீற்றிடும் யாழின்இன்ப*
*வண்ணங்கள் பாடும் வாய்விட்டுக் கூவிடும் வாஞ்சைவைத்தால்*
*பொன்னங் கிரியிடைத் தோன்றுசஞ் சீவியும் போற்றுகின்றேன்*
*முன்னங்(கு) உதிக்கும் தவத்துறை வாழ்கின்ற முக்கண்ணியே.*

**குறிப்புரை:** பொன்னங்கிரி = இமயமலை. வண்ணங்கள் = இசைவகைகள்.

**பொழிப்புரை:** தன்னைப் போற்றுகிறவர்முன் எழுந்தருளும் திருத்தவத்துறை வாழ் முக்கண்ணியாகிய அம்மை, தாமரை மலரில் அன்னமாய் அமர்ந்திருக்கும்; யாழில் இசைத்தற்குரிய பலவகை வண்ணங்களை - வாய்விட்டுக் கூவிப்பாடும்; அன்பு வைத்தால் இமயமலையில் இமவானுக்குத் தோன்றிய பார்வதியாகிய சஞ்சீவியாகவும் நம்முன் விரைந்து தோன்றும்.

**விளக்கம்:** 'இமவான்மடந்தை உத்தமி பாலா' - (திருவாவினன் குடித்திருப்புகழ்).

*90. முக்கண்ணி காண்கிளி ஏந்துகைப் பெண்பிள்ளை மோகத்தினால்*
*முக்கண்ணன் தன்நிலை போக்கிய மோகினி முன்னமும்தான்*
*செக்கச் சிவந்த சடைதிசை தைவரத் தீரமொடும்*
*ஒக்கநின்(று) ஆடுகூத் தாடிச்சி உண்மையும் ஓதுமன்றே.*

**குறிப்புரை:** உண்மை = மெய்ஞ்ஞானம். முன்னமும் = முன்ஒரு காலத்தில்.

**பொழிப்புரை:** முக்கண்ணி, கிளியைக் கையில் ஏந்திய பெண்பிள்ளை; சிவபிரானது மோனநிலை போக்கியவள்; முன் ஒரு காலத்தில் தன் செஞ்சடை திசைகளைத் தடவி வருமாறு தீரமுடன் சிவபெருமானுடன் சுழன்று ஒத்தநிலையில் கூத்தாடியவள். இத்தகு இவள் சிவஞானமும் உபதேசிப்பாள்.

**விளக்கம்:** மோனநிலை போக்கியதன் நோக்கம் உலகப் படைப்புக்கு உதவுதல் - 'சிவம் சத்தி தன்னை ஈன்றும், சத்திதான் சிவத்தை ஈன்றும், உவந்து இருவரும் புணர்ந்து இங்கு உலகுஉயிர் எல்லாம் ஈன்றும்' - (சித்தி.சுபக்.76).



*91. ஒன்றாகி வேறும் உடனாகி நிற்கின்ற உன்மத்தையைக்*
*கன்றாகிப் போற்றிக் கதறுகின் றேன்கடைத் தேறுதற்கே*
*நன்றே விழையினும் தீதே கொடுக்கினும் நாட்டமின்றி*
*வென்றே இருக்கை விளையாட்டு கொல்சென்று மேவுதற்கே.*

**குறிப்புரை:** உன்மத்தை = பித்துப் பிடித்தவள். விளையாட்டு கொல் = விளையாட்டா? எளிய செயலன்று.

**பொழிப்புரை:** உயிர்க்குலத்துடன் ஒன்றாய், வேறாய், உடனாய் நிற்கின்ற பித்துப்பிடித்தவளை, நான் பசுங்கன்றாக ஆகி, கடைத்தேறப் போற்றிக் கதறுகின்றேன். நான் கடைத்தேற எனக்கு இவள் நன்மை செய்ய விரும்பினாலும், தீதே கொடுத்தாலும் விருப்பு வெறுப்பின்றி அவற்றை வென்று வாழ்தல் வெறும் விளையாட்டல்ல; எளிதல்ல. ஆயினும் அவள் திருவருளை நான்பெற அதுவே வழி.

**விளக்கம்:** 'நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ இதற்கு நாயகமே' - (திருவா.குழைத்த.7) 'நன்றே வருகினும் தீதே விளைகினும் நான் அறிவது ஒன்றேயும் இல்லை' - (அபி.அந்த.95)

*92. மேவற்(கு) அரியவள் ஆயினும் தாய்இது மெய்என்பதால்*
*மேவற்(கு) உரிமையும் உண்டென்று நிற்கிறேன் மேற்கொண்டஎன்*
*ஆவற்(கு) அளவில்லை அற்றதும் இல்லைஇங்(கு) ஆகையினால்*
*சாவக் கடவன்என் றேஎனைக் கைவிடேல் தையல்முத்தே.*

**குறிப்புரை:** சாவக் கடவன் = சாவதற்கே உரியவன்.

**பொழிப்புரை:** பெண்தெய்வங்களுள் முத்தே, உன்னை நான் அடைதற்குரிய தகுதி இல்லாதவன் என்றாலும், நீ எனக்குத் தாய், நான் உனக்கு மகன் என்ற உரிமையால் உன்னையடையும் தகுதி உண்டு என்று உன்முன் நிற்கிறேன். உன்னை அடையும் என் ஆவலுக்கு அளவில்லை என்பது மட்டுமன்றி, அது தீர்ந்ததும் இல்லை. எனவே நான் சாவதற்கே உரியவன் என்று என்னைக் கைவிட்டுவிடாதே. மகனை எடுத்து ஆற்றி ஆள்வது தாயின் கடமையல்லவா?

**விளக்கம்:** தாயின் செயல் - 'தாகம் இன்று ஆகலின் பாகம் இன்று எனக்கு என, அருளாது ஒழியினும் பரிபவம் நினக்கே. சேய்முகம் பாரான் சினந்தனள் ஏகினும் போய்எடுத்து ஆற்றும் அத்தாய் மீட்டன்றோ' (பண்டாரமும்...20 : 36-39)

93. முத்தாரம் சூடிய மென்கம லாலய மெல்லியற்கே
பித்தாய என்மனம் கண்டும் விடுவளோ போதுகின்றேன்
எத்தாலும் என்னை எடுத்தணைப் பாள்என்றே எண்ணுகின்றேன்
சத்தாய இன்பமாய்த் தான்இருந்(து) ஆட்கொண்ட தண்ணமுதே

**குறிப்புரை:** எத்தாலும் = எவ்வகையிலாவது. சத்து = ஞானம்.

**பொழிப்புரை:** ஞான வடிவாய் இன்பமாய் இருந்து ஆட்கொண்ட அமுதே : முத்தாரம் அணிந்தவளே; மென்மையான தாமரைக் கோயிலில் எழுந்தருளியுள்ள மெல்லியலாகிய உன்மேல் பித்துக்கொண்ட என்னைக் கைவிடமாட்டாய்; எவ்வகையிலாவது ஏற்பாய் என்று எண்ணி உன்னை நோக்கி வருகிறேன்.

94. தண்ணமு(து) ஆனந்த வாரிஎம் தாய்மலர்த் தாளிணைக்கே
நண்ணாத நாட்களும் பேசாத நாட்களும் நல்லஅன்பு
பண்ணாத நாட்களும் பாடாத நாட்களும் பக்குவத்தால்
எண்ணாத நாட்களும் கூடும்என் றால்உயிர் ஏன்எனக்கே.

**குறிப்புரை:** வாரி = கடல். கூடும் = இருக்க இயலும்.

**பொழிப்புரை:** தண்ணிய அமுதாய் ஆனந்தக் கடலாய், உள்ள எம் தாயாம் உன் தாமரை மலராகிய திருவடி இணைகளை மனத்தால் பொருந்தாத நாட்களும், பேசாத நாட்களும், பக்தி செலுத்தாத நாட்களும், புகழ் பாடாத நாட்களும், பக்குவமுடன் எண்ணாத நாட்களும் என்வாழ்வில் இருக்க இயலும் என்றால் நான் ஏன் (உயிர்) வாழ வேண்டும்.

**விளக்கம்:** பேசாத நாள் - பிறவா நாள். 'பெரும்பற்றப் புலியூரானைப் பேசாத நாள் எல்லாம் பிறவா நாளே' (திருமு 6.கோயில்.பெரிய திருத்தாண்டகம் முழுதும் இதுவே மகுடம்.)

95. எனக்கே அருளைப் பொழிகின்ற மாமுகில் ஏற்றுநிற்கும்
எனக்கே பொன்மாரி பொழிகின்ற ஏந்திழை என்மனத்தே
கனத்துக் கருத்(து) எங்கும் மின்னிநின்(று) ஆர்த்துப்பின்
கால்இறங்கி
மனத்தே இனித்(து) எந்தன் வாக்கில் வெளிப்படும் வாலையன்றே.

**குறிப்புரை:** கனத்து = நெருங்கி, வாலை = இளம் கன்னி (பூப்படையாத 12 வயதினள் என்பர்) ஏற்று = மனத்தில் ஏற்று. கால் இறங்கி = பொழிந்து.



**பொழிப்புரை:** இவ்வாலைப்பெண்ணின் திருவடிகளை என் மனத்தே ஏற்று நிற்கும் எனக்கு அருள்பொழியும் இவள் கார்கால மேகம்; எனக்குப் பொன்மழை பொழிகின்றவள்; என் மனத்தில் நெருங்கி, கருநிறம் கொண்டு, எவ்விடத்தும் மின்னி, ஆரவாரித்து (இடித்து) அருள் பொழிந்து மனத்தில் இனித்து என்வாக்கில் வெளிப்படுகின்றவள் ஆவாள்.

**விளக்கம்:** அம்மையை மேகமாக உருவகிப்பது மரபு -
'முன்னிக் கடலைச் சுருக்கி எழுந்து உடையாள்,
என்னத் திகழ்ந்து எம்மை ஆளுடையாள் இட்டிடையின்,
மின்னிப் பொலிந்து எம்பிராட்டி திருவடிமேல்,
பொன்னஞ்சிலம்பில் சிலம்பித் திருப்புருவம்,
என்னச் சிலைகுலவி நந்தம்மை ஆளுடையாள்,
தன்னில் பிரிவிலா எங்கோமான் அன்பர்க்கு,
முன்னி அவள்நமக்கு முன்சுரக்கும் இன்னருளே'
என்னப் பொழியாய் மழை ஏலோர் எம்பாவாய்'
- (திருவாச.திருவெம்.16).

96. வாலையை வேதாந்த வல்லியை நெஞ்சினுள் வாழவைத்துக்
காலையும் மாலையும் உச்சியும் ஆகஎக் காலத்துமே
ஓலமிட்(டு) ஏத்திஅவ் ஒண்மலர்ப் பாதத்தை உன்னுகின்றேன்
ஓலைகொண் டேநமன் தூதர்வந் தால்விழுந்(து) ஓடுதற்கே.

**குறிப்புரை:** வேதாந்தவல்லி = உபநிடதக்கொடி. ஓலமிட்டு = அபயம் கூவி.

**பொழிப்புரை:** எமதூதர் எனக்கு ஓலை கொண்டுவந்தால் அவர்கள் விழுந்து ஓடும்பொருட்டு, வாலையை, உபநிடதக் கொடியை என்மனத்தில் குடிஏற்றிக் காலையும் மாலையும் உச்சிப்பொழுதும் என்று எந்த நேரத்திலும் அபயம் கூவி ஏத்தி இவளது ஒளிபொருந்திய திருவடிகளை எண்ணுகிறேன்.

**விளக்கம்:** எமபயம் தீரவேண்டுதல் : மைப்போதகத்திற்கு நிகர் எனப் போது எருமைக் கடா மீதேறியே, மாகோர காலன் வரும்போது தமியேன் கலங்கித் தியங்கும். அப்போது வந்துன் அருட்போது தந்தருள் ஆதிகடவூரின் வாழ்வே - (அபி.பதிகம் 1.10).

97. ஓடுற்ற இம்மனம் ஓடா(து) ஒடுங்கின ஒண்புலன்கள்
தேடுற்ற சேவடிக் கீழ்நின் றிருந்தன தித்தித்திப்
பாடுற்ற செஞ்சொல் பனித்(து)ஊறி நின்றன பண்தாளத்தால்
ஆடுற்ற தேவனின் பங்கிருந் தாள்அருள் ஆகின்றதே.

**குறிப்புரை:** பனித்து = துளித்து. ஊறி = வாயூறி. பண்தாளத்தால் = பண்ணுடன் பொருந்திய தாளத்துடன்.

**பொழிப்புரை:** நிலை கொள்ளாது ஓடிய என்மனம் ஓடாது நிலை கொண்டது; ஒளிபொருந்திய புலன் ஐந்தும் தாம் தேடிய அன்னையின் திருவடியில் பதிந்து நின்றன. இனிக்கப் பாடிய செஞ்சொற்கள் நாவில் துளித்து வாயூறிநின்றன. பண்ணுடன்தாளம் பொருந்த ஆடும் சிவனது இடப்பாகம் இருப்பவளின் அருளே இவை எல்லாம் ஆகும்.

98. *ஆகின்ற ஆனந்த வெள்ளத்(து) அழுந்தின ஆணவம்தான்*
*போகின்ற போதில் புலன்ஒன்றி நானின்றிப் போதுமுற்றச்*
*சாகின்ற(து) ஊழ்வினை தன்மையும் முன்னிலைச் சாட்சியமே*
*ஆகின்ற(து) ஒன்றென வே(று)என்ன நான்சொல்ல ஆகின்றதே.*

**குறிப்புரை:** நான் இன்றி = அகப்பற்று ஒழிந்து. போது = போயினது.

**பொழிப்புரை :** ஐம்புலன்களும் ஆனந்த வெள்ளத்தில் மூழ்கின. ஆணவம் போம்போது ஐம்புலன்களையும் ஒன்றச் செய்து நான் என்ற அகப்பற்றுடன் போயினது. ஊழ்வினை முற்றாக மடிந்தது. இனிவேறு என்ன சொல்ல வேண்டும்? இவற்றுக்கு எல்லாம் நானும் என் முன் உள்ளனவும் சாட்சிகளாக உள்ளோம்.

**பொழிப்புரை :** 'நான்' அகப்பற்று; 'எனது' புறப்பற்று. இவை ஒன்றையொன்று பற்றி நின்று ஓங்குவன. நான் போயிற்று, எனவே எனது என்ற புறப்பற்றும் போயிற்று என்பது குறிப்பு.

99. *தேடும் தமிழினைச் சித்தாந்த வல்லியைச் சேவித்தபின்*
*பாடும் படிக்கும் புலமைக்கும் வாதுக்கும் பக்கத்திலே*
*நீடும் புகழ்க்(கு)ஓர் தவத்துறை மேவிய நித்திலம்தான்*
*கூடும் கை கூடும் என்(று)என்உள்ளம் மேவிக் குளிர்கின்றதே.*

**குறிப்புரை:** சித்தாந்தம் = முடிந்த முடிபு. பாடும் = ஒழுக்கத்திற்கும். படிக்கும் = குணத்திற்கும். புலமைக்கும் = அறிவுக்கும். வாதுக்கும் = விவாதத்துக்கும். நித்திலம்தான் பக்கத்திலே கூடும் என்க.

**பொழிப்புரை :** நீளும் புகழுக்கு ஒப்பற்ற திருத்தவத்துறையோர் தேடும் தமிழ் ஆனவளை; சித்தாந்தக் கொடியை வணங்கிய பிறகு என் ஒழுக்கத்திற்கும் குணத்துக்கும், அறிவுக்கும், விவாதத்துக்கும்



விவாதத்துக்கும். நித்திலம்தான் பக்கத்திலே கூடும் என்க.

**பொழிப்புரை :** நீளும் புகழுக்கு ஒப்பற்ற திருத்தவத்துறையோர் தேடும் தமிழ் ஆனவளை; சித்தாந்தக் கொடியை வணங்கிய பிறகு என் ஒழுக்கத்திற்கும் குணத்துக்கும், அறிவுக்கும், விவாதத்துக்கும் உறுதுணையாக அந்த நித்திலமாகிய அம்மையே என் பக்கத்தில் வந்து இருக்கும். இதனால் என் எண்ணங்கள் கைகூடும் என்று என் உள்ளம் முழுதும் பரவிக் குளிர்கின்றது.

100. *தேனூறு தண்டமிழ்த் தீஞ்சுவைச் சொற்களாய்த் தித்திக்குமே*
*வானூறும் இன்பத்து வாழ்வித்தும் ஆழ்வித்தும் வாய்மடுத்த*
*ஆனூறு மாமுலை போல்விம்மி அம்பிகைக்(கு) அன்(பு) ஒன்றுமே*
*ஊன் ஊறி உள்ளத்தில் ஊற்(று)ஏறி இன்பம் உதிக்கின்றதே.*

**குறிப்புரை:** ஒன்றுமே = ஒன்று மட்டுமே. வான் = மேன்மை. விம்மி = பருத்து. ஊன் ஊறி = உடம்பெல்லாம் ஊறி.

**பொழிப்புரை :** இவ்வம்மைமீது கொண்ட அன்பு மட்டும் இனிமை ஊறும் தண்டமிழ்த் தீஞ்சுவைச் சொற்களாய்த் தித்திக்கும்; மேன்மை சுரக்கும் பேரின்பத்தில் நம்மை வாழ்வித்துத் திளைக்கவும் செய்யும். இதனால் கன்று வாய்வைத்த தாய்ப்பசுவின் மடிபோல் பேரின்பம் விம்மி அம்மையின் அருள், உள்ளத்தில் ஊற்றாய்ப் பெருகிட உதிக்கின்றது.

திருச்சிற்றம்பலம்

கூழி

**நூற்பயன் :**

1. *அன்பிற்(கு) எளியதோர் அன்னத்தை வெண்நிற அஞ்சுகத்தை*
*அன்பு கெழீஇய அம்மையை இன்புக்(கு)ஓர் ஆலயத்தை*
*அன்பிற்(கு) இலக்குஆம் பெருந்திரு ஆகின்ற ஆரமுதை*
*அன்புசெய் வார்க்குத் தவத்துறை ஆலயம் ஆகின்றதே.*

**குறிப்புரை:** வெண்ணிற அன்னத்தை என்று கூட்டுக.

**பொழிப்புரை :** அன்பு செலுத்த எளிதாய் விளங்கும் வெண்ணிறம் வாய்ந்த அன்னமாய், கிளியாய் இருந்து எம்மீது பேரன்புமிக்க எம்அன்னையை, வீடுபேற்றின்பத்துக்கு இடமானவளை; அன்பு செய்வார்க்குத் தக்க இடம் திருத்தவத்துறைத் திருக்கோயிலாகும்.

**பொழிப்புரை :** திருத்தவத்துறை மூதாட்டியாகிய அன்னைமீது பாடப்பெற்ற இச்செந்தமிழ் அந்தாதியை நம்பற்றுகள் அறுமாறு கற்றால் நம் வாழ்வு இனிக்கும்; சித்திகள் கைகூடும்; காலன் நம்மைப் பிடிக்காது நீங்குவான்; நற்பேறுகள் ஓங்கும்; அருள்தரு பெருந்திருப்பிராட்டியாகிய நம் நற்றாய் எழுந்தருளி அருள்பாலித்து வீடுபேறும் அருள்வாள்.

திருச்சிற்றம்பலம்

★



## அருள்தரு பெருந்திருப்பிராட்டி அந்தாதி - செய்யுள் அகரநிரல்

எண் : பாட்டெண்

